

# வரலாறு சொல்லும் பாடம்

தமிழீழக் கல்விக் கழகம்

## முதலாம் பதிப்பின் முன்னுரை

தமிழீழம் தனது விடுதலைக்கான போராட்டத்தில் வெற்றி இலக்கை நோக்கி விரையும் காலகட்டம் இது.

தற்கொடையும், தளராத உரமும், வீறும் விரைவுங் கொண்ட போர்க்கள அருஞ்செயல்கள் உலகின் விழிகளை விரிக்க வைக்கும் இந்த வேளையில், பேச்சுவார்த்தை, உடன்படிக்கை என்ற முனைப்புக்களும் எதிர்பார்ப்புக்களும் எழத்தான் செய்கின்றன.

"வரலாறு சொல்லும் பாடம்" என்ற இந்த நூல், பேச்சுவார்த்தைகள், உடன்படிக்கைகள், முறிவுகள், ஏமாற்றங்கள் என, தமிழீழ மக்கள் கடந்த காலத்தில் படித்த பாடங்களை முழுமையாக விளக்குகின்றது.

ஈழத்தமிழர்கள் சிங்களப் பேரினவாதத் தலைமையிடம் ஏமாந்துபோன, பேரினவாதிகளால் ஏமாற்றப்பட்ட உண்மைக்கதையைச் சொல்வதோடு, இனிமேலும் ஏமாந்துபோய்விடாமலிருக்குமாறான எச்சரிக்கையையும் செய்கின்றது.

தம்மையும், தமது வரலாற்றையும் உள்ளபடி அறிந்து கொள்ளாத எந்த இனமும் காலவெள்ளத்தில் அள்ளுண்டு காணாமற் போய்விடும்.

இந்த நடைமுறை தமிழீழ மக்களுக்கு மட்டும் விலக்காகிவிடப் போவதில்லை.

தமிழ் மாணவர்களிடையே, தமது வரலாற்றை அறியும் முனைப்பு ஏமாற்றந்தரும் வகையில் அருகிக்கிடக்கின்றது. போராட்டங்கள், வெற்றி தோல்விகள், ஏமாற்றங்கள் கொண்ட உண்மை வரலாற்றின் பதிவுகளை மாணவர்கள் மனதிலே விதைக்க வேண்டிய வரலாற்றுக் கடமை ஆசிரியர்களுக்கு உண்டு. தமது இருப்பை உறுதி செய்யப் போராடும் தமிழீழ நாட்டின் உயிர்ப்பை இந்தப்பணி உறுதிப்படுத்தும்.

தமிழீழ மக்கள், குறிப்பாக ஆசிரியர்கள் மாணவர்கள் பயன் கொள்ளுவதற்கென்றே பல இடையூறுகள், பொருண்மிய வலுவின்மை, பற்றாக்குறைகள் ஆகியவற்றுக்கிடையிலே கல்லச்சு நூலாக இந்நூலை வெளியிடுகின்றோம்.

உரிய முறையில் அறிவு கொளுத்தி உண்மை வெளிவர இந்நூல் உதவுமென நாம் நம்புகின்றோம்.

வெ. இளங்குமரன்
பொறுப்பாளர்,
தமிழீழக் கல்விக் கழகம்.

*15.04.2001*

## இரண்டாம் பதிப்பின் முன்னுரை

ஈழத் தமிழ் மக்களின் உரிமைப்போராட்டங்கள் வீறுபெற்ற காலங்களில், அவற்றைத் தணித்துவைக்கும் நோக்குடன் பேரினவாதிகளால் காலத்துக்குக் காலம் அரங்கேற்றப்பட்ட பேச்சுவார்த்தைகள், உடன்படிக்கைகள், வாக்குறுதிகள், உடன்பாட்டுக் குறிப்புக்கள், ஏமாற்றங்கள் என்று ஈழத்தமிழினம் பட்டுணர்ந்த கடந்த கால அரசியற் பாடங்களை ஈழத்தமிழர்களுக்கு நினைவூட்டுவதற்காக பேச்சுவார்த்தை, உடன்படிக்கை என உலகளாவிய அழுத்தங்கள் எம்மினத்தின் மீது மேற்கொள்ளப்பட்ட காலத்தில், தமிழர் ஏமாற்றப்பட்ட வரலாற்றைக் கூறும் "வரலாறு சொல்லும் பாடம்" என்ற இந்நூலின் முதலாவது பதிப்பு வெளியிடப்பட்டது.

தமிழீழ மாணவர்களுக்கு அவர்களின் உண்மை வரலாற்றினை உணரவைக்கும் பெரும் பணியை ஆர்வத்தோடு விரும்பியேற்ற தமிழீழ ஆசிரியப் பெருந்தகைகளுக்கு உதவுகின்ற வகையில் கல்லச்சில் பொறிக்கப்பட்ட 2000படிகள் முதலாம் பதிப்பாக ஈழத்தமிழர் இன எழுச்சிப் பாசறையினால் வெளியிடப்பட்டது. அதையடுத்து இந்த நூல் பகுதி பகுதியாக, அரசியற்றுறை வெளியீடான வழிகாட்டி மாத இதழில் வெளிவந்தது.

பெரும்பான்மை இனம் சிறுபான்மையினரின் உரிமைகள் தொடர்பாக எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று டொனமூர் அவர்களால் அன்று வழங்கப்பட்ட மதியுரைகளைத் துளிகூட மதிக்காமல், தமிழ்மக்களைத் திட்டமிட்டுப் புறக்கணித்து, தனிச்சிங்கள அமைச்சரவை அமைத்து இனவெறியோடு செயற்பட்ட சிங்களப் பெரும்பான்மை இனத்தை நம்பி, ஆங்கிலேய அரசியலறிஞர் சோல்பரிப்பிரபு தமிழ் மக்களையும் சேர்த்து ஆளும் உரிமையைச் சிங்களப் பெரும்பான்மையினரிடம் கையளித்துச் சென்றதானது, பின்னர் தமிழினத்தை எத்தகைய அரசியற் பாழுங் கிணற்றில் வீழ்த்தியிருக்கிறது என்பதையும் பௌத்த சிங்களவர் தவிர ஏனையமக்கள் இந்த மண்ணில் மானத்தோடு மனிதர்களாக வாழ சிங்கள இனம் ஒரு போதும் இடமளிக்கப்போவதில்லை என்பதையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்ற வகையில், கடந்த ஒரு நூற்றாண்டு அரசியல் வரலாறு சுருக்கமாகவும் அழகாகவும் "வரலாறு சொல்லும் பாடம்" என்ற இந்தச் சிறு நூலினூடாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

தமிழினத்துக்குப் பெரும் பாதுகாப்பு என்று சோல்பரிப்பிரபு அமைத்து வழங்கிய அரசியல் வரம்புகளையெல்லாம் சிங்கள "இனவாதிகள்" எப்படித் திட்டமிட்டுத் தகர்த்தெறிந்தார்கள் என்பது பற்றியும் சிங்களவரை நம்பிய சோல்பரிப்பிரபு காலங்கடந்து "இனவாதத்தைப்" புரிந்து கொண்டு வருந்திப் புலம்பியமை பற்றியும் இந்நூல் எடுத்தியம்புகின்றது.

சோல்பரிக்குப் பின்னர் இலங்கைத் தீவின் இனச் சிக்கல்களைத் தீர்த்து வைப்பதற்கு உதவுவதாக வந்தவர்களும் கடந்தகால வரலாற்றைச் சற்றும் எண்ணிப் பார்க்காது, தமது நலன்களைப் பேணும் மையக்குறிக்கோளுடன் கூடிய பழையபாணித்தீர்வையே தமிழினத்தின் மீது திணிக்க முயன்றனர். அடுத்து, பிரபாகரன் தலைமையிலான இன்றைய தமிழ்த்தலைமை பழைய தலைமைகளைப்

போலன்றி, விழிப்புடனும் உறுதியுடனும் இருந்து சிங்களத்தின் சூழ்ச்சிகளைஎதிர் கொண்டமை பற்றியும், தெளிவுபடுத்துகின்ற வகையில், ஈழத்தமிழர் இன எழுச்சிப் பாசறை இந்நூலை ஆக்கித்தந்திருக்கிறது.

தமிழீழத்திலும், உலகளாவிய அளவில் பரந்தும் வாழுகின்ற ஈழத்தமிழர்கள் அனைவரும் தெரிந்து வைத்திருக்க வேண்டிய பல அரிய செய்திகளுடனும் இருநூறுக்கும் மேற்பட்ட படங்களுடனும் ஆவணங்களுடனும் மெருகூட்டப்பட்டு இரண்டாவது பதிப்பாக இந்நூலை வெளியிடுவதில் ஈழத்தமிழர் இன எழுச்சிப் பாசறை மட்டற்ற மகிழ்ச்சியடைகிறது.

**வெ. இளங்குமரன்**

**.....11.2006**

**பொறுப்பாளர்,**
**தமிழீழக் கல்விக் கழகம்.**

## கற்காலத்துக்கும் முன்னே..

வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே இலங்கைத்தீவில் தமிழர்கள் வாழ்ந்து வருகின்றனர். இலக்கிய, தொல்லியல், அகழ்வாய்வு, கல்லெழுத்துப் பதிவுகளும் இன்று இவற்றை உறுதி செய்கின்றன. புத்தளம் பொன்பரப்பியிலும், குஞ்சுப்பரந்தனிலும் அகழ்ந்தெடுக்கப்பட்ட ஈமத்தாழிகள், மாந்தையிலும், ஆனைக்கோட்டையிலும், காரைநகரிலும் அகழ்ந்தெடுக்கப்பட்ட மனித எலும்புக்கூடுகள் என்பன, இந்தியத் தமிழ் நிலத்தோடு கற்காலந்தொட்டே ஈழத்துக்கு இருந்து வந்த குருதித் தொடர்பு பற்றிய உண்மையைப் பேசுகின்றன. மிகக்குறுகிய ஆழமற்ற கடல்வழி மட்டுமே இந்தியத்தமிழகத்தையும், ஈழத்தமிழகத்தையும் பிரிப்பதனால், திராவிடத் தமிழ் இனத்தின் இருப்பு கற்காலத்துக்கு முற்காலத்தையும் தாண்டியதாக இருக்கக் கூடுமென ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

இதுபோன்ற எத்தனையோ தொல்லியல் எச்சங்கள், தமிழர்களே இத்தீவின் மூத்த குடிகள் என்பதை நிறுவுகின்றன. கி.பி 6 ஆம் நூற்றாண்டிலே மகாநாமதேரர் என்ற தேரவாதத் துறவியினால் பாளிமொழியிலே தொகுக்கப்பட்ட "மகாவம்சம்" என்ற நூல், இலங்கையிலே காலடிவைத்த முதல் மனிதன் விசயன் என்றும், அவன்தான் சிங்களவர்களின் முன்னோடி என்றும் பேசுகின்றது.

இது இட்டுக்கட்டிய பொய்யான கதையென்றும், புளுகுரை என்றும், வரலாறு அல்லவென்றும், வரலாற்று ஆய்வாளர்கள், சிங்கள அறிஞர்கள் உட்பட, ஏராளமானோர் சொல்லி வருகின்றனர். இந்த மகாவம்சத்தின் முதுகிலேதான் "சிங்கள பௌத்தம்" என்ற சிம்மாசனமிட்டு இன்றைய சிறிலங்கா சிங்கள அரசு ஆள நினைக்கின்றது.

இலங்கையின் முதற்குடி தானே என்றும், தமிழர்கள் பிற்காலத்தில் தென்னிந்தியாவிலிருந்து படையெடுத்து வந்த வன்கவர்வாளர்களின் வழித்தோன்றலான 'வந்தேறு குடிகள்' என்றும் சிங்கள மேலாண்மை வாய்வலிக்கப் பேசுகின்றது. மிக அண்மைக்காலம்வரை இந்தக் கதைதான் எல்லோராலும் நம்பப்பட்டு வந்தது. இன்றுவரை சிறிலங்கா அரசின் பாடநூல்களிலும்கூட, இந்தப் பொய்க்கதைகளே வரலாற்று உண்மைகளாகச் சொல்லப்பட்டும், புகட்டப்பட்டும், மாணவர்களின் வரலாற்று அறிவு திட்டமிட்டு மழுங்கடிக்கப்படுகிறது. விசயன்தான் இந்தத்தீவில் முதற் குடிமகன் என்றும், கானான் பிரதேசம் கடவுளால் யூதருக்கு வாக்களிக்கப்பட்டதைப் போன்று இலங்கை, விசயனுக்கு புத்தபெருமானால் வாக்களிக்கப்பட்டது என்ற மகாவம்சப் புரட்டை நம்பிய, நம்புகின்ற நடுநிலையற்ற வரலாற்று ஆசிரியர்கள், விசயன் வந்த சமகாலத்திலேயே தென்னிந்தியாவிலிருந்து மிகப் பெருந்தொகையினராகத் தமிழர்கள் வந்து குடியேறினர் என்று மகாவம்சம் கூறும் இன்னொருசேதியை மனங்கொள்ளவே இல்லை.

## தமிழ்க்குடியிருப்பின் தொன்மை

பாண்டிய இளவரசியோடு ஆயிரக்கணக்கான தமிழ்க்குடும்பங்கள் விசயன் காலத்திலேயே இலங்கையிற் கால்பதித்தன என்பதை ஏற்றுக்கொள்ளின், தமிழர்களுக்கும் இந்தத்தீவின் உரிமையிற் சரிபாதி இருக்கின்றது என்பதை ஏற்க நேரிடும் என்ற கசப்பான உணர்வினால் மகாவம்சத்தைத் தலையில் தூக்கி ஊர்வலம் நடத்தும் சிங்கள அறிவாளர்களும், பௌத்த சிங்கள வெறிக் கொள்கையாளர்களும், அவர்களின் உச்சக்குறியீடான சிறிலங்கா அரசும், பாண்டிய இளவரசியோடு, ஆயிரக்கணக்கான தமிழ்க் குடும்பங்கள் தமிழகத்திலிருந்து வந்து இறங்கி நிலைகொண்டதான மகாவம்சச் சேதியை மறைக்கவே முயலுகின்றனர்.

## ஆய்வுகள் சொல்லும் சேதி

- குஞ்சுப்பரந்தன் ஈமத்தாழி
- நாவாந்துறை மட்கலங்கள்
- பொன்பரப்பி ஈமத்தாழி
- ஆனைக்கோட்டை எலும்புக்கூடு, முத்திரை
- காரைநகர் எலும்புக்கூடு
- கந்தரோடை தொல்லியல் எச்சங்கள்
- பூநகரி எலும்புக்கூடுகள்
- பெரியபுளியங்குளம் பிரமிக்கல்வெட்டுக்கள்


காரைநகர் எலும்புக்கூடு


ஆனைக்கோட்டை எலும்புக்கூடு


ஆனைக்கோட்டை முத்திரை


பொன்பரப்பி ஈமத்தாழி

மேற்கண்ட அகழ்வாய்வு, மேலாய்வுக் கண்டுபிடிப்புகள் இலங்கையிலே விசயன் காலத்துக்கும் முந்தியதும், விசயன் காலத்தோடு இணைந்ததுமான தமிழரின் இருப்பை உறுதி செய்கின்றன. இன்று விசயன் என்ற ஒருவன் இருந்தானா? அவன் மனிதனில்லாத இலங் கைக்கு வந்து கால் பதித்தானா? என்பதே கேள்விக்குரியதாகிவிட்டது. இது (மகாவம்சம்) வெறும் கட்டுக்கதை யென்றும், பௌத்தத்தின் மேன்மையைச் சொல்வதற்காக துறவிகளாற் காரியங்கருதிப்

புனைந்துரைக்கப்பட்ட போலிக்கதையே என்றும் நிறுவும் ஆய்வுகள், சிங்கள வரலாற்று அறிஞர்களிடமிருந்துகூட வெளிவரத் தொடங்கிவிட்டன.

மகாவம்சம் குறிப்பிடுகின்ற நாகர்களுக்கும், இன்றைய தமிழர்களுக்குமுள்ள தொடர்பு தமிழர்களின் தொன்மையை விளக்குகின்றது. தமிழ் மக்கள் செறிவாக வாழும் வடக்கு, கிழக்கு பகுதிகளிலுள்ள நாகர்கோவில்களும், நாகவழிபாடும், "நாக"... எனத் தொடக்கமும், முடிவும் கொண்ட ஆயிரக்கணக்கான பெயர்களும் தமிழர்களின் இறையியல் நம்பிக்கைகளில் நாகத்துக்குரிய பெரும் மேன்மையும், தமிழர் இலக்கியங்களிற் பேசப்படும் நாகர்களும், நாகங்களும், நாகர்களுக்கும் தமிழர்களுக்குமிடையே உள்ள குருதித்தொடர்பையும், உறவையும் எடுத்து விளக்குகின்றன. எவ்வகையிற் பார்ப்பினும் இலங்கைத்தீவின் தொன்மையிலே தமிழ் மக்களுக்குரிய பதிவு மறுக்கப்பட முடியாததாகும்.



இத்தகையதொரு அழியாத பதிவை இலங்கைத்தீவில் வைத்துள்ள தமிழர்களை,

- வந்தேறுகுடிகள் என்பதும்,
- ஒரு தேசிய இனமே அல்ல என்பதும்,
- வன்கவர்வாளர்களின் வழித்தோன்றல்கள் என்பதும்,
- கள்ளத்தோணிகள் என்பதும்.

சிறிலங்காப் பாராளுமன்றப் பெரும்பான்மையினால் தமிழர்களை அழித்தொழித்து "சிறிலங்கா முழுவதும் சிங்கள பௌத்தருடையதே" என்ற பொருந்தாக் கொள்கையை இராணுவ வல்லாண்மை கொண்டு நிறுத்த முயல்வதுமே இன்று இலங்கையில் குருதி ஆறு ஓடுவதற்குக் காரணங்களாக இருக்கின்றன.

மகாவம்சம்கூட, வட இந்தியாவிலிருந்து வந்த பௌத்த துறவிகளின் மொழியான பாளியிலேதான் எழுதப்பட்டது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். ஏனெனில், அதைச் சிங்களத்தில் எழுதி முடிக்குமளவுக்கு கி.பி. 6 ஆம் நூற்றாண்டில், சிங்களம் ஒரு வளமான மொழியாக இருக்கவில்லை.

பிற்காலத்தில் வடமொழி, பாளி, தமிழ் மூன்றுங்கலந்தே சிங்களம் உருவானது. ஆனால் தமிழ்மொழி, சிங்கள உருவாக்கத்துக்குப் பெருமளவிலான சொற்களைக் கடன் கொடுத்துள்ளதென்பதோடு, மகாவம்சம் பாளியில் உருவாகுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன், கி.பி. 2 ஆம் நூற்றாண்டுகளின் அளவிலேயே, பௌத்த காப்பியமான "மணிமேகலை, குண்டலகேசி" போன்ற நூல்களை அது தன்னகத்தே கொண்டிருந்தது என்பதும் நினைவு கொள்ளத்தக்கது.

சிங்களவர்களைப் போலவே "பௌத்தநெறி" மீது நம்பிக்கை கொண்டவர்களாகத் தமிழ் மக்களும் இருந்திருக்கின்றார்கள் என்பதை இக்காப்பியங்களிலிருந்து புரிந்து கொள்ள முடியும். எனினும், ஈழத்தமிழர்களுடன் பண்பாட்டு நெருக்கங்கொண்ட தமிழகத்தில், பௌத்தம் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பின் வீழ்ச்சியடைந்தபோது, தமிழ் ஈழத்திலும் இத்தகைய வீழ்ச்சி நிகழ்ந்ததென்பது உண்மை.

விசயன் காலத்திலிருந்தே இலங்கைத்தீவைத் தமிழர்களும், சிங்களவர்களும் மாறிமாறி ஆண்டார்கள் என்பது வரலாற்றுக்குறிப்பு.

வட இந்தியாவிலிருந்து மகேந்திரபிக்கு (மகிந்தன்) வந்து, அப்போதிருந்த மன்னனான தேவநம்பிய தீசனை மதம் மாற்றினான் என்பதும், அன்றிலிருந்துதான் பௌத்தம் இலங்கையிற் பூத்துப் பொலியத் தொடங்கியது என்பதும் மகாவம்சம் கூறும் சேதிதான். எனவே விசயன் என்ற இடைச்செருகல் தொட்டு, தேவநம்பியதீசன் வரையுள்ள மன்னர்களின் இறைநெறி கூடத் தமிழ்மக்கள் பேணும் இறைநெறியான இந்துநெறியாகத்தான் இருந்திருக்கின்றது.

இந்தப் பின்னணிகளெல்லாம் மறுக்கப்பட்டு, சிங்கள பௌத்தக் காட்டாறு தமிழர்களின் குடியிருப்புகள்மீது பாயத் தொடங்கியதாற்றான் அமைதி விரும்பிகளான தமிழ் மக்களின் கைகளிலே ஆயுதம் ஏறத் தொடங்கியது.

2000 ஆண்டுகளுக்கு மேலாக வடக்கு, கிழக்கில் தமிழர்களும், தென்மேற்கில் சிங்களவர்களும், வாழ்ந்து வருகின்றனர். மையப்பகுதியை வலிமை கூடியவர்கள் மாறிமாறிக் கைப்பற்றி ஆண்டு வந்திருக்கின்றனர்.

## போர்த்துக்கேயர் கால இலங்கை அரசுகள்

கி.பி. 1505இல், போர்த்துக்கேயர் முதல்முதலில் இலங்கையிற் காலடி எடுத்து வைத்தனர்.

அப்போது இலங்கையில் 3 அரசுகள் இயங்கின.

- ➢ யாழ்ப்பாண அரசு
- ➢ கோட்டை அரசு
- ➢ கண்டி அரசு




இந்த மூன்று அரசுகளிலும், பழைமையானதும், வலுவானதுமாகத் திகழ்ந்தது, தமிழரின் அரசான யாழ்ப்பாண அரசுதான். தரை, கடல் வலுவோடு வெளிநாட்டு ஏற்றுமதி, இறக்குமதிகள் செய்த யாழ்ப்பாண அரசு உயர்ந்திருந்தமையை, போர்த்துக்கேயர் மற்றும் ஊரோடிகளின் குறிப்புகளிலே நாம் பார்க்கலாம். சிங்கள வரலாற்று நூல்களும், இலக்கியங்களும் இதே செய்திகளை எமக்குத் தருகின்றன. இந்த மூன்று அரசுகளினதும் இறைமை வீழ்ச்சிக்கு அன்றைய சிங்கள அரசுகளே காரணமாயின என்பது, இன்றைய சிங்கள பௌத்த வெறி ஆட்சியாளாரினால் விழுங்கப்பட முடியாத, அல்லது விழுங்கத் துடிக்கின்ற கசப்பான உண்மை வரலாறு ஆகும்.

தமிழர்கள் தமது ஆட்சி இறைமையை ஐரோப்பிய நாடுகளிடம் இழந்தாலும் அதற்கான கால்கோளை இட்டது சிங்கள அரசுகள்தான் என்பது, நினைவிலே நிறுத்தப்பட வேண்டிய வரலாற்றின் பதிவுகளாகும்.கோட்டை அரசைச் சேர்ந்த மூன்று சிங்கள உடன் பிறந்தார்களுக்குள் ஏற்பட்ட "அரியணை அவா" அந்த அரசைச் சரித்தது. புவனேகபாகு, றைகம் பண்டார, மாயாதுன்னை ஆகிய அந்த மூவர்க்குள் ஏற்பட்ட பணிநிலைப் பிணக்குகள் போர்த்துக்கேயரை வலிந்து கோட்டை அரசியலுக்குள் வரவழைத்தன. கி.பி. 1597 இன்பிறகு, கோட்டையரசின் முடி போர்த்துக்கேயருக்குத்தான் என்று அடிமை முறி எழுதிக் கொடுத்துவிட்டு இறந்தவன் புவனேகபாகுவின் மகள் வழிப்பேரனான தொன்சுவான் தர்மபால. இதனால், கோட்டையரசு போர்த்துக்கேயரின் கைகளிலே விழுந்தது.

கோட்டையரசைக் கைப்பற்றும் போர்த்துக்கேயர் முயற்சிக்கு எதிராக, கோட்டைச் சிங்களவர்களுக்குச் சார்பாகப் போர்க் கொடிதூக்கியது முதலாம் சங்கிலிய மன்னனது யாழ்ப்பாணத் தமிழரசு. வேற்று இனமாக இருந்த போதிலும் ஒரு தீவுக்குளளே வாழ்ந்த ஒருமைப்பாட்டு உணரவினால், உதவிவந்த யாழ்ப்பாணத் தமிழரசின் முதுகிலே குத்தியது அன்றைய சிங்கள ஆட்சி வெறியர்கள்தான் தம்மைத்தாமே அடிமைப்படுத்திக் கொண்டது மட்டுமன்றி, சிங்களக் கூலிப்படைகளாகப் போர்த்துக்கேயப்படைகளுக்குத் துணைவந்து, தமிழர்களின் பேரரசான யாழ்ப்பாணத் தமிழரசைப் போர்த்துக்கேயர் வீழ்த்த அவர்கள் பேருதவி புரிந்தனர்.



தமிழர் தாயகமான வடக்குக் கிழக்கிலே விரிந்து பரந்திருந்த யாழ்ப்பாணத் தமிழரசு, அண்டை அரசுகளான கண்டி அரசினாலோ, கோட்டை அரசினாலோ போரிலே வீழ்த்தப்படவில்லை. போர்த்துக்கேயரிடந்தான் யாழ்ப் பாணத் தமிழரசு தனது இறைமையை 1619 இல் இழந்தது.

தொன்சுவான் தர்மபாலா

போர்த்துக்கேயரிடமும், தொடர்ந்து வந்த ஒல்லாந்தரிடமும், கண்டி அரசு தனது இறைமையை இழக்கவில்லை. அதன் புவியியற் சூழல் அதனைக் காப்பாற்றி இருந்தாலும், கண்டி ஆட்சிப் பகுதி 1815 இல், இலங்கையின் கரையோரப் பகுதிகளை ஆண்ட ஆங்கிலேயர் கையகம் சென்றது. அந்த வீழ்ச்சிக்கும் சிங்கள மேல் மட்டத்தின் காட்டிக் கொடுப்புக்களே காரணமாயின என்பதை இலங்கையின் பிற்கால வரலாறு தெளிவாகச் சொல்கிறது. கண்டி அரசு ஒரு பௌத்த சிங்கள அரசாக இருந்த போதும், அதனை கி.பி. 1739 முதல் 1815 வரை 76 ஆண்டுகளாக ஆண்டவர்கள் தமிழ் மன்னர்கள்தான்."[1]





தொன்சுவானின் கையெழுத்து

தொன்சுவானின் பொன்னுருவுக்கு முடி சூட்டுமாறு வேண்டி புவனேகபாகுவால் போர்த்துக்கல் மன்னனுக்கு அப்பொன்னுருவை வைத்து அனுப்பப்பட்ட யானைத்தந்தப் பேழை

அவர்களது வீரான ஆட்சியில் கண்டி அரசைக்கைப்பற்றப் பலதடவை ஒல்லாந்தராலும். ஆங்கிலேயராலும முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டாலும் அவர்கள் கேவலமான தோல்விகளையே எதிர்கொண்டனர். எனினும், அந்தத் தமிழ் அரசர்களது அரண்மனைக்குள்ளேயே பௌத்த சிங்கள வெறி நுழையத் தொடங்கியதானது, இலங்கை வரலாற்றில் துயர் மிகுந்த வரிகளாகும். தனது இனத்திலிருந்தே தனக்குரிய மனைவியரை மன்னன் தேடியதும், சிங்களப் பௌத்த அரசின் மன்னனாக ஒரு தமிழன் எப்படி இருக்க முடியும் என்ற சிங்களப் பெருங்குடிச் சிந்தனையும் கண்டி அரசின் மீளமுடியாத சறுக்கலுக்குக் காரணங்களாயின. முதல் அமைச்சர் பிலிமத்தலாவ முதலிலே சூழ்ச்சி செய்தான். எனினும், தமிழ மன்னன் கண்ணுச்சாமி என்ற ஸ்ரீவிக்கிரமராசசிங்கன் சீறி வந்த ஆங்கிலப் படையைச் சிதறடித்தான் பிறகு எகலப்பொல சூழ்ச்சி செய்தான். சிங்கள இனவெறியின் தூண்டுதலோடு சிங்கள அமைச்சர்கள், போர்வீரர்களின் கபமை நிறைந்த காட்டிக் கொடுப்போடு தமிழ் மன்னன் வீழ்த்தப்பட்டான். கண்டி பரசும் ஆங்கிலேயராற் கைபகப்படுத்தப்பட்டது. சிங்கள பௌத்தம காக்கப்படும் என்ற வாக்குறுதியை ஆங்கிலேயரிடமிருந்து பெற்றுக் கொள்வதில் மட்டும், "காட்டிக்கொடுத்த" சிங்களவர் வெற்றி கொண்ட போதும, காலப்போக்கில் ஆங்கிலேயர் அவர்களைப் பதவிப் பொறுப்புகளிலிருந்து இறக்கியபோதுதான்




விழிக்கத்தொடங்கினர. கடைசியாகக் கண்டியரசை ஆண்ட தஞ்சை புதுக்கோட்டை பூலாம்பட்டியைச் சேர்ந்த தமிழ் மன்னன் கண்ணுச்சாமி என்ற சிறீவிக்கிரமராசசிங்கன் ஆங்கிலேயரால் தமிழ் நாட்டின் வேலூருக்குக் கொண்டு சென்று சிறை வைக்கப்பட்டு, 1832 இல். அங்கு இயற்கைச் சாவடைந்தான். பெரும் மதிப்புடன் அங்கு அவனுக்காக நாட்டப்பட்ட நினைவுக்கல்லும். முத்து மண்டபமும், இலங்கை ஆட்சியில் தமிழரின். பெரும் பங்களிப்பை இன்றும் பேசி நிற்கின்றன. 1815 இல கண்டி அரசு வீழ்ந்த பின்னரும் கூட. 1833 வரை இலங்கைத்தீவிலிருந்த 3 ஆட்சிப் பகுதிகளிலும தனித்தனியாகவே ஆட்சி நடத்தப்பட்டு வந்தன. இதற்குக் காரணம் இல்லாமால் இல்லை.

மொழி, இன, பண்பாட்டு வாழ்வியல் முறைகளினால் முற்றிலும் மாறுபட்ட தன்மையைக் கொண்ட,

1. தமிழர்களையும் சிங்களவர்களையும் ஒருசேர ஆள்வதில் உள்ள இடர்பாடு,

2. 1815 இலே கண்டியரசு தமிழ் மன்னனிடமிருந்து கைப்பற்றப்பட்ட போது 'கண்டிப்பகுதி தனியாகவே ஆளுகைக்குட்படுத்தப்படும்' என்று ஆங்கிலேயரால் கண்டி மக்களுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதி.

அதனோடு, கரையோரச் சிங்களவருக்கும், கண்டிச் சிங்களவருக்கும் இடையே நிலவிவந்த வாழ்வியல் முரண்பாடுகள் ஆங்கிலேயரின் ஆளுகைக்குப் பெரும் நெருக்கடிகளை ஏற்படுத்தின.

எனினும், 1833 இல், கோல்புறூக் கமறன் அரசியற் சீர்திருத்தத்தின்படி, முழு இலங்கையும் ஒரு ஆளுகையின் கீழ்க் கொணடுவரப்பட்டு மூன்று ஆட்சிப பகுதிகளும் ஒன்றிணைக்கப்பட்டு 5 நிர்வாக மாகாணங்கள் ஏற்படுத்தப்பட்டன.

அப்போது, தமது பகுதிகளான நுவரகலாவிய (அநுராதபுரம்) தம்மங்கடுவ (பொலநறுவை) பகுதிகளை வடக்கு கிழக்கு மாகாணங்களோடு இணைத்ததை, கண்டிச் சிங்கள மக்கள் கடுமையாக எதிர்த்தனர். இருப்பினும் தமிழர்களுக்கும், சிங்களவர்களுக்கும் உள்ள முரண்பாடுகள், வாழ்வியல் இடர்கள், வேறுபாடுகள் கிளைகோர்ன் குறிப்புகளில் மிகத் தெளிவாகவே எடுத்துக் காட்டப்பட்டன.


1833 இல் இலங்கையின் மாகாணங்கள்

தமிழ், சிங்கள மக்களை ஒன்றாக ஆள்வதிலுள்ள இடர்பாடுகளைத் தனது பட்டறிவினால் நன்றாக அறிந்த ஆங்கிலேய ஆளுநர் சேர் வில்லியம் கிறேகரி 1873 இல், தமிழர் பகுதிகளாக அன்றிருந்த, இன்றைய வடக்கு கிழக்கு மாகாணப் பகுதிகளுடன் 1833 இல் இணைக்கப்பட்டிருந்த இன்றைய சிங்களப் பகுதிகளான நுவரகலவெவ (அநுராதபுரம்) தம்மன்கடுவ (பொலநறுவ) பகுதிகளை மீண்டும் வேறாக்கி, புதிதாக வடமேல் மாகாணம் எனத் தனி மாகாணத்தை ஆக்கினார். விந்தனைப் பகுதி கிழக்கு மாகாணத்திலிருந்து பிரிக்கப்பட்டு, புதிதாக உருவாக்கப்பட்ட ஊவாமாகாணத்துடன் இணைக்கப்பட்டது. 40 ஆண்டுகளுக்குள் சிங்களப் பகுதிகள் மீண்டும் வேறாக்கப்பட்டு, தமிழ்ப் பகுதிகளை மட்டும் கொண்ட வடக்கு, கிழக்கு மாகாணங்கள் உருவாக்கப்பட்டன.

1871 இல் நடத்தப்பட்ட இலங்கையின் குடித்தொகைக் கணக்கெடுப்புப் பட்டியல் வடக்கு, கிழக்கு மாகாணங்கள் முழுமையான தமிழர் பகுதிகளே என்பதை மெய்ப்பிக்கின்றன. 1833 இல் நடைமுறைக்கு வந்த கோல்புறூக் அரசியல் திட்டம் 1931 வரை சிறு சிறு திருத்தங்களோடு நிலவியது. கோல்புறூக்கினால் நிறுவப்பட்ட சட்டசபையே காலஓட்டத்தில் பல்வேறு சீர்திருத்தங்களின் ஊடாக, மெல்ல மெல்ல சட்டசபை, அரசாங்கச் சபை என்ற நிலைகளில் வடிவெடுத்து, தமிழர்களின் தூக்குக்கயிறான இலங்கைப் பாராளுமன்றமாக மாறியது என்பது வரலாறு.




பல்லாயிரக் கணக்கான மைல் தொலைவில் இருந்துகொண்டு குறைந்த ஆளணியோடு இலங்கைத்தீவு முழுவதையும் ஆளுகை செய்ய வேண்டுமென்பதை மட்டுமே அன்று, ஆங்கிலேயர் கருத்தில் எடுத்துக் கொண்டதால் இலங்கையில் நீண்ட பண்பாட்டுப் பின்னணியோடு வாழ்ந்த தமிழ் மக்களின் இருப்பினை உறுதி செய்யும் அவர்களது அவாவினை ஆங்கிலேயர் புரிந்து கொள்ளவில்லை; புரிந்து கொள்ள முயற்சிக்கவும் இல்லை. மேலோட்டமான பார்வையோடு ஆங்கிலேயரால் வகுக்கப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்ட ஆளுகைத்திட்டங்கள், சிங்கள தமிழ் இனங்களின் இடையேயான வெடிப்பையும் ஐயங்களையும் மேலும் மேலும் பெரிதாக்கவே பயன்பட்டன.



## கோல்புறூக் அரசியற் சீர்திருத்தம்
## சட்டசபைக் கட்டமைப்பு

| ஆண்டு | மொத்த உறுப்பினர் | அலுவல சார் உறுப்பினர்கள் | அலுவல சார்பற்ற உறுப்பினர்கள் | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ஐரோப்பியர் | பறங்கியர் | தமிழர் | சிங்களவர் | முஸ்லிம் |
| 1833 இல் | 5 | 09 | 03 | 01 | 01 | 01 | |
| 1889 இல் | 17 | 09 | 03 | 01 | [illegible] | 02* | 01 |

*கண்டி கரையோர சிங்களவர்களுக்கு ஒவ்வொரு உறுப்பினர்கள்

இனவாரிப் பிரதிநிதித்துவத்தை அறிமுகப்படுத்திய கோல்புறூக் அரசியற் சட்டத்திற்குச் சட்ட மூலங்களைக் கொண்டுவரும் உரிமையில்லாத போதும் தமிழர் சிங்களவர் வலு 1:1 என இருந்தது. 1889 இல், இந்நிலை மாறி சிங்களவர் தமிழர் உறுப்புரிமை 2:1 என ஆனது.

இதைத் தொடர்ந்து வந்த குறூமக்கலம் அரசியற் சீர்திருத்தம் 1910 இல் நடைமுறைக்கு வந்தது. ஆளுநரால் நியமனம் செய்யப்படும் உறுப்பினர் அறுவர். இதன்படி சிங்களவர் தமிழர் உறுப்புரிமை 3:2 என இருந்தது. எனினும், படித்த இலங்கையருக்கான தெரிவுத் தேர்தலில் சேர். பொன். இராமநாதன் வெற்றியீட்டியமையால் சிங்களவர் தமிழர் உறுப்புரிமை 3:3 எனச்



சேர் பொன் இராமநாதன்



டாக்டர் மாக்கஸ் பெனான்டோ

சமநிலைப்பட்டது. தேர்தலில் வாக்களிக்கும் உரிமை அன்று எல்லா இலங்கையருக்கும் வழங்கப்படவில்லை. கல்வி அறிவுடையோரும் செல்வம் மிகுந்தோரும் மட்டுமே வாக்களிக்கும் உரிமை பெற்றிருந்தனர். கல்வி அறிவைப் பொறுத்தவரை தமிழர்கள் சிங்களவர்களை விஞ்சி நின்ற காரணத்தால் பெரும்பான்மைச்

சிங்களவரை இத்தேர்தலில் வெற்றி கொள்ளக்கூடிய வாய்ப்பு ஒரு தமிழருக்கு அமைந்தது அதுமட்டுமன்றி. அன்று கண்டிச் சிங்களவர்கள் கரையோரச் சிங்களவர்களின் வெற்றியை விரும்பாததால் இராமநாதனுக்கு வாக்களித்து அவர் வெற்றி பெற உதவினர்.[13]

1916 ஆம் ஆண்டு நடந்த தேர்தலிலும் டி.எஸ். ஜெயவர்த்தனா என்னும் சிங்களவருடன் போட்டியிட்டு சேர்.பொன். இராமநாதன் இரண்டாம் முறையும்



தேர்தல் பரப்புரை 1911

[illegible]

வெற்றி காண முடிந்தது. 1915 இல், சிங்கள முஸ்லிம் கலவரம் ஏற்பட்டு பல முஸ்லிம்கள் உடல், உடைமை வழியாகப் பாதிக்கப்பட்ட போது, பிரித்தானிய அரசு தனது இரும்புக் கைகளால் அக்கலவரத்தை அடக்கி, சிங்களவர் பலரைச் சுட்டுக்கொன்று, பலரைச் சிறைக்குள்ளே தள்ளியது. அவ்வகையிற் சிறைப்பட்டவர்களில் முதன்மையானவர் இலங்கையின்



சேர் பொன் இராமநாதனை குதிரை வண்டியில் ஏற்றி இழுத்துச் சென்ற சிங்களத் தலைவர்கள். (டி.எஸ்.சேனநாயக்க, எப்.ஆர். சேனநாயக்கா, ஐ.டப்ளியூ.பெரேரா, பாரன் ஜெயதிலக, ஏ.இ.குணசிங்க ஆகியோரும் அவர்களில் அடங்குவர்.)

முதலாவது பிரதமராகப் பிற்காலத்திலே தெரிவு செய்யப்பட்ட டீ. எஸ். சேனநாயக்கா ஆவார். தேசிய ஒற்றுமை வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்த சேர் பொன். இராமநாதன் இங்கிலாந்து வரை சென்று சிறைப்பட்ட சிங்களத் தலைவர்களுக்காக வாதாடி அவர்களை விடுவித்தார். இந்த நன்றிக் கடனுக்காக டி.எஸ் சேனநாயக்கா உட்பட தலைவர்கள் இங்கிலாந்தில் இருந்து கொழும்புத் துறைமுகத்தில் வந்து இறங்கிய இராமநாதனைத் தேரில் குதிரை வண்டியில ஏற்றி, அங்கிருந்து அவரது வீடுவரை வடம்பிடித்து இழுத்துச் சென்றுதம் நன்றியுணர்வினைத்தெரிவித்துக் கொண்டனர்.

இதே டீ எஸ்.சேனநாயக்காதான் பிற்காலத்தில் திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களின் சிற்பியாகி, தமிழ் மக்களின் தாயக நிலம் விழுங்கப்பட முதலடி எடுத்துக் கொடுத்தவர்.



சிங்களத்தலைவர்கள் சேர் பொன் இராமநாதனை குதிரைவண்டியிலேற்றி கொழும்பு நகரவீதியில் இழுத்துச் செல்லும் காட்சி.

1921 இல் இருந்து 1924 வரை நடைமுறையில் இருந்தது மானிங் அரசியற் சீர்திருத்தம். இதில், அலுவல் சாரா உறுப்பினர் தொகை 23ஆகக் கூட்டப்பட்டது. நியமன, இனவாரி, பிரதேசவாரி, உறுப்புரிமைகளை ஒரேநேரத்தில இவ் அரசியற் சீர்திருத்தம் அறிமுகப்படுத்தியது. இந்தப் பிரதேசவாரிப் பிரதிநிதித்துவமே பிற்காலத்தில் தேர்தல் மாவட்டங்களும் தேர்தல் தொகுதிகளும உருவாகக் காரணமாயிற்று.

மனிங் செய்த இவ் அரசியற் சீர்திருத்தத்தினால் அதுவரை சட்டசபையில் ஓரளவு சமபிரதிநிதித்துவத்தைக் கொண்டிருந்த தமிழருக்குப் பெருந்தீங்கு விளைந்தது. சிங்களவருக்கு 13 பிரதிநிதித்துவத்தை அள்ளி வழங்கிய அச்சீர் திருத்தம் தமிழருக்கு 3ஐ மட்டுமே விட்டுவைத்தது. 1920ஆம் ஆண்டுக்கு முன்னர் இருந்த இனக்கூறுபாடு (இனவிகிதாசாரம்) பேணப்படவேண்டும் எனவும், குறைந்தது சிங்களவர் தொகையின் 2/3 பங்காவது தமிழர் பிரதிநிதித்துவம் அமைய வேண்டுமெனவும் தமிழர்கள் வற்புறுத்தினர்.

மேல்மாகாணத்தில் பரவலாக வாழும் தமிழ் மக்களைப் பிரதிநிதித்துவம் செய்ய, அம்மாகாணத்தில் ஒரு தமிழ்ப் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டுமெனவும் தமிழர்கள் கோரிக்கை விடுத்தனர்.

இந்த நேரத்திலேதான் சிங்களவர் தமிழருக்குச் செய்த முதலாவது நம்பிக்கை மோசடி நிகழ்ந்தது. 1919 டிசம்பர் 14 இல் உருவான இலங்கைத் தேசிய காங்கிரஸ் அமைப்பின் முதல் தலைவராக விளங்கியவர் சேர் பொன் அருணாசலம் அவர்கள். மானிங் அரசியற் சீர்திருத்தத்தின் மூலம் தமிழர்களின் பிரதிநிதித்துவம் குறைக்கப்படுவதை இலங்கைத் தேசிய காங்கிரசிலிருந்த சிங்களத் தலைவர்கள் கண்டு கொள்ளவில்லை.



சேர் பொன் அருணாசலம்   சேர் ஜேம்ஸ் பீரிஸ்

## தமிழர்களை ஏமாற்றிய முதல் உடன்படிக்கை (1918)

இலங்கைத் தேசிய காங்கிரஸ் தொடங்கப்படுவதற்கு முன்னரேயே 1918இல், தமிழ்-சிங்களத்தலைவர்கள் ஓர் உடன்படிக்கையைச் செய்திருந்தனர்.

சட்டசபையில் தமிழர் பிரதிநிதித்துவத்தின் விகிதாசாரம் குறையாமற் காக்கப்படும் என்றும், மேல்மாகாணத்தில் ஒரு தமிழ்ப்பிரதிநிதித்துவம்

வழங்கப்படவும் தாம் தொழிற்படுவோம் என்றும் இலங்கைத் தேசியசங்கத்தின் சார்பில் ஜேம்ஸ் பீரிசும், இலங்கைச் சீர்திருத்தக் கழகத்தின் சார்பில் ஈ.ஜே சமரவிக்கிரமாவும் தமிழர் தரப்பைப் (யாழ்ப்பாணச் சங்கத்தை) பிரதிநிதித்துவப் படுத்தியிருந்த சேர் பொன். அருணாசலத்திற்கு எழுத்து மூல உறுதிமொழி வழங்கியிருந்தனர் ஆனால், 1921 இல் தமிழ்ப் பிரதிநிதித்துவம் தலைகீழ் வீழ்ச்சியைக் கண்டபோது, அதனைக் கண்டும் காணாதவராகி, தமது வாக்குறுதியைச் சிங்களத் தலைவர்கள் காற்றிலே பறக்கவிட்டனர். தேர்தலிலும் மேல்மாகாணத்தில் சிங்கள வேட்பாளரையே நிறுத்தினர்.

இதனாற்றான் சேர். பொன். அருணாசலம் 1922 இல், இலங்கைத் தேசிய காங்கிரசிலிருந்து விலகி, தமிழர் மகாசபையை அமைத்துக் கொண்டார் தமிழர் நலன்களைப் பாதுகாக்க, தமக்கென ஒரு சபையை நிறுவவேண்டிய தேவையை உணர்ந்ததன் விளைவே இது.*

கண்டிச் சிங்களவர்கள்கூட கரையோரச்சிங்களவர் தம்மைக் காட்டிக் கொடுத்து விட்டதாகவே கருதினர். மானிங் சீர்திருத்தத்தின்படி தங்களது பிரதிநிதித்துவம் கரைந்து போனதால், அவர்களும் தேசிய காங்கிரசிலிருந்து விலகினர். கண்டி மாகாணங்களுக்கு உள்ளூர் ஆளுகையுடன் கூடிய தனியான சுயாட்சியைக் கண்டிச் சிங்களவர் கோரினர்.

அந்நிலையில், அவர்களோடு ஒத்துழைத்து அவ்வகைக் கோரிக்கையை எழுப்பாத வரலாற்றுத்தவறை தமிழ்த் தலைவர்கள் அன்று செய்தது வருத்தத்திற்குரிய உண்மையாகும்.[04]

தமிழர்களும் கண்டிச் சிங்களவர்களும விலகியபின் இலங்கைத்தேசிய காங்கிரஸ் கரையோரச் சிங்களவர்களின் நலன்பேணும் கரையோரச் சிங்கள மகாசபையாகவே இயங்கியது.

1924 இல் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டு, 1931 டொனமூர் அரசியல் சட்டம் இயற்றப்பட்ட காலம் வரை, மானிங் டிவன்ஸயர் அரசியற் சீர்திருத்தம் உயிரோடு இருந்தது. தமிழர்கள் சிங்களத்தலைவர்களால் ஏமாற்றப்படுகின்ற 2ஆவது நிகழ்வு இக்காலத்திலேதான் அரங்கேறியது.

### தமிழர்களை ஏமாற்றிய இரண்டாவது உடன்படிக்கை (1925)

1925 யூன் 28 இல், யாழ்ப்பாணத்தில் சேர் வைத்திலிங்கம் துரைசாமியின் வீட்டில் (வீட்டின் பெயர் மகேந்திரகிரி) வட்டமேசை மாநாடு ஒன்று நிகழ்ந்தது தமிழர் மகாசபைக்கும இலங்கைத் தேசிய காங்கிரசிற்கும் இடையே சிங்கள, தமிழ் உடன்படிக்கை என்னும உடன்படிக்கையும் கைச்சாத்திடப்பட்டது இவ் உடன்படிக்கையே மகேந்திரகிரி உடன்படிக்கை`` எனப்படுகிறது

01 வடக்கு கிழக்குப் பிரதேசத்தில் முழுமையாகவும், மேல்மாகாணத்தில் சிங்களவர்களுக்கு வழங்கப்படும் உறுப்புரிமையின் 2/3 பங்கும் தமிழர்களுக்கு வழங்கப்பட வேண்டும்.

02. இலங்கைத் தேசிய காங்கிரஸ் முன்வைக்கும் அனைத்து யோசனை களையும் பரிசீலிக்க ஒரு குழு நியமிக்கப்பட வேண்டும்.

ஆனால், இந்த உடன்படிக்கை நடைமுறைப்படுத்தப்படவே இல்லை. இலங்கைத் தேசிய காங்கிரஸ் உடன்படிக்கையைச் செயற்படுத்த முன்வராது காலம் கடத்தியதைக் கண்டித்து.

இலங்கைத்தேசிய காங்கிரஸ் குழுவிற்குத் தலைமைதாங்கி யாழ்ப்பாணம் வந்து உடன்படிக்கை செய்து கொண்ட சீ. இ. கொரியாவின் தம்பி, விக்ரர் கொரியா காலியில் நடைபெற்ற இலங்கைத்தேசிய காங்கிரஸ் மாநாட்டில் கடுமையாகச் சாடிப் பேசினார்.


சீ.ஈ.கொரியா
சேர் வைத்திலிங்கம் துரைச்சாமி
விக்டர்.கொரியா

"தேசிய காங்கிரஸ் தலைவர்களை நம்பமுடியாது சிங்களத்தலைவர்களின் சொல் செல்லாக்காசு போன்றது என்று தமிழர்கள் கருதுகிறார்கள். அதன் கருத்தை வலியுறுத்துவதுபோல நடக்கப் போகிறீர்களா?" என்று இலங்கைத் தேசிய காங்கிரஸ் மாநாட்டில் கேள்வி எழுப்பினார்.

மானிங் சீர்திருத்தத்தில் இலங்கைத்தமிழர்களின் கோரிக்கை நிறைவேற்றப்படவே இல்லை. சிங்களப் பிரதிநிதித்துவத்தின் 2/3 பங்காவது தமிழர்களுக்கு வழங்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை சிங்களத்தலைமையின் பேரினவாதப் போக்கினால் கருகிப் போயிற்று இலங்கைத்தேசிய காங்கிரஸ் கரையோரச் சிங்களவர் காங்கிரஸ் என்பதை மெய்ப்பித்தது.

அதைபடுத்து 1931 இல் வந்த டொனமூர் அரசியறறிட்டம் 1947 வரை நிலைத்தது. பெரும்பான்மைச் சிங்கள மக்களின் பிரதிநிதித்துவத்தைப் பெருமளவில் வீங்கச் செய்து, இனமுரண் பாடுகளைக் கூர்மைப் படுத்தியதில் இந்த அரசியல் சட்டத் திற்குப் பெரும் பங்குண்டு. தமிழர்கள் தனிவழி அரசியலை நாடிச்செல்ல இதுவுமொரு காரணமாயிற்று. பிரதேசவாரிப் பிரதிநிதித்துவம் தமிழர்களின் உறுப்புரிமையை அரசாங்க சபையில் வெகுவாகக் குறைத்ததால் சிறுபான்மையினராக


டொனமூர்


டி.எஸ். சேனநாயக்கா



C.W.W. கன்னங்கரா, W.A.சில்வா C.பெரேரா, கொத்தலாவலை S.W.R.D.பண்டாரநாயக்கா, D.S.சேனநாயக்கா பாரன் ஜெயதிலகா [illegible]

இருந்த தமிழர் இரண்டாம் தரத்திற்குத் தள்ளப்பட்டனர். இச் சட்டத்தின் கீழ் 1936 ஆம் ஆண்டில் இரண்டாவதாக அமைந்த அமைச்சரவை, தமிழரின்

உறுப்புரிமையின் வலுவற்ற நிலையை வாய்ப்பாகக் கருதி, தமிழ்ப் பகுதிகளிற் சிங்களக் குடியேற்றங்களை அமைக்கும் திட்டங்களைத் தீட்டியது. அந்த அமைச்சரவையில் காணி வேளாண் அமைச்சராக இருந்த டீ.எஸ். சேனநாயக்கா, தமிழரின் பாரம்பரிய நிலமான கந்தளாய், பாவற்குளம் பகுதிகளில் வேளாண் துறைவளர்ச்சியென்னும் போர்வையில் சிங்களக் குடியேற்றங்களுக்கு கால்கோள் இட்டார். இதனால், 1921ஆம் ஆண்டு குடிசனமதிப்பீட்டில் கிழக்கு மாகாணத்தில் 0.5 வீதமாக இருந்த சிங்களவர் குடித்தொகை அதிகரித்து எடுக்கப்பட்ட மதிப்பீட்டில் 4.0 வீதமாகியது. டொனமூர் அரசியல் திட்டத்தின் கீழ் 1936இல் அமைந்த தனிச்சிங்கள அமைச்சரவை தனது பேரினவாதப் போக்கைக் காட்டத் தவறவில்லை.


வீ நல்லையா


ஜே ஆர்


பண்டாரநாயக்கா


ஜீ ஜீ


சோல்பரி

### அரசாங்கச் சபையில் இனவாதமும் தமிழ்க்காங்கிரசின் தோற்றமும்

1943இல், ஆங்கில மொழிக்கு மாற்றாக சிங்களம் மட்டும் ஆட்சி மொழியாக வேண்டுமென்று ஜே.ஆர். ஜெயவர்த்தனா அரசாங்கச் சபையிலே தீர்மானம் கொண்டுவந்தார். ஆனால், விவாதத்தின் போது ஆங்கிலத்திற்கு மாற்றாக தமிழ்.சிங்களம் இரண்டுமே ஆட்சிமொழியாகவும் கல்வி மொழியாகவும் இருக்க வேண்டுமென்ற திருத்தம் மட்டக்களப்பு உறுப்பினர் வீ. நல்லையாவால் முன்மொழியப்பட்டு, எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயக்காவினால் வழி மொழியப்பட்டு நிறைவேற்றப்பட்டது. (ஆனால், இலங்கையின் சுதந்திரத்தின் பின் சிங்களம் மட்டும் சட்டத்தை 1956ஆம் ஆண்டில் பண்டாரநாயக்காவே கொண்டு வந்து நிறைவேற்றினார்.) 1944 டிசம்பரில், சோல்பரி தலைமையில் இலங்கை வந்த

உசாவற்குழு 1945 ஏப்ரல் மாதம் வரை. இலங்கையின் பல்வேறு சமூகத்தைச் சேர்ந்தவாகளினதும் கருத்தைக் கேட்டறிந்தது.

1936இல் இருந்து 1942வரை ஆட்சியிருந்த தனிச்சிங்கள அமைச்சரவையின் செயற்பாடுகளால், பெரும் பின்னடைவுகளை எதிர்கொண்ட இலங்கைத் தமிழர்கள் இலங்கைத் தமிழ்க் காங்கிரஸ் கட்சியில் ஒன்று சேர்ந்து 50இற்கு 50எனும் கோரிக்கையை சோல்பரியின் முன்னே வைத்தனர். பெரும்பான்மைச் சிங்களவருக்கு 50வீத உறுப்புரிமையும், ஏனைய சிறுபான்மையோர்களுக்கு (இந்தியத் தமிழர், முஸ்லீம்கள் உட்பட) 50வீத உறுப்புரிமையும் கொடுக்கப்பட வேண்டுமென்பதே 50இற்கு50 கோரிக்கையின் நிலைப்பாடாகும். அன்றைய காங்கிரஸ் கட்சியின் தலைவர் ஜி.ஜி.பொன்னம்பலம் இக்கோரிக்கையை முன்வைத்து வாதாடினார். எனினும், இலங்கைத்தீவில் சிங்கள, தமிழ்மக்களின் வரலாற்றுப் பின்னணியைச் சரிவர உணர்ந்து கொள்ளாத சோல்பரி குழுவினர், பேரினவாதச் சிங்களவருக்குக் கட்டற்ற உரிமைகளை வாரிவழங்கும் அடிப்படைகளின் மீது தமது அரசியற்றிட்டத்தை வகுத்துச் சென்றனர். பிற்காலத்தில் இனப்பிரச்சினை கூர்மையடைந்து பெரும் மோதல்கள் ஏற்பட்டு இரத்த ஆறு ஓடத்தொடங்கியபோதுதான், தான் செய்த தவறுகளை சோல்பரி அவர்கள் உணர்ந்து, காலங்கடந்த பின்னர் வருத்தம் தெரிவித்தார்.



பாமரின் நூலுக்குச் சோல்பரி எழுதிய முன்னுரை

## சோல்பரியின் காலந்தவறிய வருத்தம்

பீ.எச்.பாமர் எழுதிய "சிலோன் ஏ டிவைடட் நேசன்" என்ற நூலுக்கு முகவுரை எழுதியபோது அதில், சோல்பரி இப்படிக் குறிப்பிடுகிறார்.

'இந்தியா, பாகிஸ்தான், மலாயா, நைஜீரியா, போன்ற நாடுகளுக்கான அரசியற்றிட்டங்களிற் செய்தது போல, சிறுபான்மையினரின் உரிமையை உறுதிசெய்யும் வலிய காப்பீடுகளை இந்த (இலங்கை) அரசியற்றிட்டத்திற்குப் பரிந்துரை செய்யாமல் விட்டது பெரும்பிழையென்று இப்போது நான் நினைக்கின்றேன். இந்த இரண்டு (சிங்களவர், தமிழர்) சமுதாயங்களுக்கிடையிற் காலங்காலமாக நிலவும் முரண்பாடுகள் பற்றிய மேலெழுந்த வாரியான புரிதலே எமது ஆணைக்குழுவிற்கு அப்போது இருந்தது. சிறுபான்மையினரின் மனநிறைவும், நலனும் இலங்கைத் தீவின் ஒட்டுமொத்த

நலனுக்குத் தேவையானது என்பது அரசாங்கத்திற்கு நன்கு தெரியுமென்றே, ஆணைக்குழு அன்று திருப்திப்பட்டுக் கொண்டது. ஆணைக்குழுவின் குறிப்பின்படி அவ்வகையில் இல்லையெனில் எந்தவொரு காப்பீடும் நீண்ட காலத்துக்கு நிலைக்க முடியாது. அண்மைய ஆண்டுகள் ஆணைக்குழுவின் இந்த அவதானிப்பு முழுதாகச் சரியெனவே காட்டுகிறது"

டி.எஸ். சேனநாயக்கா உயிரோடு இருந்திருந்தால் 1958இல், நிகழ்ந்த அதிர்ச்சியூட்டும் நிகழ்வுகளும், அதனைத் தொடர்ந்த பரபரப்புகளும் நிச்சயம் நிகழ்ந்திருக்க முடியாதெனத் தான் நம்புவதாகச் சோல்பரி கூறுகிறார். 1945இல் டி.எஸ் சேனநாயக்கா பிரித்தானிய அரசுக்கு அரசியற்றிட்டத்தைப் பரிந்துரைத்துப் பேசும்போது "நாட்டின் நலனுக்குத் தமிழர்கள் முக்கியமானவர்கள்" என்று கூறியதை சோல்பரி அப்படியே நம்பி ஏமாந்தாரென்பதை அவரது முகவுரை வெளிப்படையாகக் காட்டுகிறது. டி.எஸ்.சேனநாயக்கா டொனமூர் அரசியற்றிட்டத்தின் கீழான சட்டசபையிற் கிடைத்த தனிச்சிங்கள அமைச்சரவை வாய்ப்பைப் பயன்படுத்தி, தமிழர் நிலங்களை விழுங்கத் திட்டங்களைத் தீட்டிக்கொண்டிருந்த அதேவேளை, பிரித்தானியாவின் கண்களிலே ஒருமைப்பாடு கொண்ட இலங்கையைக் கட்டியெழுப்பத் துடிக்கும் தூய்மையாளராகத் தம்மைக் காட்டிக்கொள்ளவுந் தவறவில்லை பிற்காலத்தில் 1986ஆம் ஆண்டு பெபரவரி 28ஆம் நாளன்று, 94 000 இந்தியத் தமிழர்களுக்குக் குடியுரிமை வழங்கும் சட்டமூலத்தின்மீது பேசும்போது கலவானைத்தொகுதி உறுப்பினர் சரத் முத்துவெட்டுவேகம "டி.எஸ்.சேனநாயக்கா உயிரோடு இருந்திருந்தால மாக்கியவெல்லிக்கு அரசியற் பாடம் கற்றுக் கொடுத்திருப்பார்." என்று கூறுமளவிற்கு அக்காலத்தில் அரசியற் சதுரங்கக்காயகளை டி.எஸ்.சேனநாயக்கா உருட்டினார்.

## சோல்பரி வகுத்த சிறுபான்மையினருக்கான காப்பீடு

சிறுபான்மையினருக்குக் காப்பீடாகச் சிலவற்றைத் தமது அரசியற்றிட்டத்திலே சோல்பரி வரைந்திருந்தார் என்பது உண்மையே. அதுவும்கூட சிறுபான்மையினரின் பல்வேறு அழுத்தங்களினாலேயே செய்யப்பட்டது. "ஆணைக்குழு இலங்கையிலிருந்தபோது சில சிங்கள அரசியல்வாதிகளின் பேச்சு, சிங்கள மக்களின் ஒருமைப்பாட்டையும் தமிழர்களை அடக்கி அழுத்துவதையும் நோக்கிய பேச்சுக்களாய் அமைந்திருந்தன. டி.எஸ்சேனநாயக்காவிலும் அவரது கீழ் அமைந்த அரசிலும் ஆணைக்குழுவுக்கு நம்பிக்கை இருந்தபோதிலும், சிறுபான்மையோரின் சார்பாகச் சில சட்டக்காப்பீடுகளை வைக்கவேண்டிய தேவையை இத்தகைய பேச்சுக்களே அவசியமாக்கியது" என சோல்பரி மனந்திறந்து பேசியிருக்கின்றார். இலங்கைத் தமிழர்களை பிரித்தானியா எப்படி நோக்கியது என்பதற்கு, அன்றைய இங்கிலாந்துப் பாராளுமன்ற எதிர்க்கட்சித் தலைவா கம்மன்ஸ் அவர்களின் வெளிப்படையான கூற்று ஒரு அசையாச் சான்றாகும் "தமிழர்கள் அளவுக்கு மீறி ஆசைப்படக்கூடாது தருவதைப் பெற்றுத் திருப்தி கொள்ளவேண்டும் தமிழர்கள் பொதுவுடமைக் கருத்தின் பாற் பட்டவராதலால் அவர்களுக்கு வழங்கப்படும் பெரும் உரிமைகள் பிரித்தானிய முடிக்குப் பாதகமாய் அமையக்கூடும்." என்று இலங்கைக்குச் சுதந்திரம் வழங்கும்

தீர்மானத்தின்போது இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் கம்மன்ஸ் வெளிப் படையாகவே கூறினார். சோல்பரி அரசியற் சட்டத்தின் 29(2)ஆம் பிரிவு சிறுபான் மையினருக்கு வழங்கப்பட்ட சிறந்த காப்பீடாக அப்போது சொல்லப்பட்டது. அதன்படி,

அ. எந்த ஒரு மதத்தினதும் சுயமான செயற்பாட்டைத் தடுக்கும் வகையில் அல்லது கட்டுப்படுத்தும் வகையிலான சட்டத்தை,

ஆ. எந்தவொரு சமூகத்திற்கோ அல்லது மதத்திற்கோ விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை அல்லது தகுதியின்மையை பிறிதொரு சமூகத்திற்கு அல்லது மதத்திற்கு வழங்குகின்ற சட்டத்தை,

இ. எந்வொரு சமூகத்திற்கோ அல்லது மதத்திற்கோ வழங்கப்பாத சலுகைகளை அல்லது முன்னுரிமையை இன்னொரு சமூகத்திற்கு அல்லது மதத்திற்கு வழங்குகின்ற சட்டத்தை,

ஈ. எந்த ஒரு மதத்தினதும் சட்டத்தை அம்மதத்தின் ஆளும் சபையின் ஒருமைப்பாடின்றி மாற்றும் சட்டத்தை நாடாளுமன்றம் ஆக்க முடியாது.

இவ்வகையிற் செயற்படும் அளவிற்கு செல்லுபடியற்றதாக்கும். சிங்களப் பெரும்பான்மை நாடாளுமன்றத்திலே தமக்கு வரக்கூடிய பெரும்பான்மை வலுவைக் கொண்டு சிறுபான்மையினரைக் கீழ்த்தள்ள முடியாத அளவிற்கு மிகவும் இறுக்கமான காப்பீடாகவே இது அமை கின்றது என்று சோல்பரியும், அவரைச் சேர்ந்த வர்களும் அன்று கருதினர். நாடாளுமன்ற மொத்த உறுப்பினர்களின் (மன்றத்திற்கு வருகை தராதவர்கள் உட்பட) 2/3 பேர் ஒருப்பாடு வேண்டுமென்று 29(4) இல் விதிக்கப்பட்டது. ஆயினும், சோல்பரி அரசியல் யாப்பின்படியான தேர்தல் முறையில் சிங்களவர் 2/3 பங்கு பெரும்பான்மை பெறக்கூடிய வாய்ப்பு இருக்கவே செய்தது கட்சி வேறுபாடுகள் காரணமாகச்



செ.கோடீஸ்வரன்
அரசாங்க எழுது வினைஞர் சங்கத் தலைவர்

சிங்களவர்களால் 1970வரை 2/3 பெரும் பான்மைகொண்ட அரசை அமைக்க முடியவில்லையே தவிர. பிரதிநிதித்துவ வலுவில் அந்த இலக்கினைத் தரக்கூடிய வலுவைச் சிங்கள இனத்தவர் கொண்டேயிருந்தனர்.

## சோல்பரியின் காப்பீட்டைத் தகர்த்தெறிந்த சிங்கள இனவாதம்

பெரும்பான்மைச் சிங்களவரின பேரினவாத வெறிக்கு ஓரளவு கடிவாளமாக இச்சட்டப்பிரிவு இருக்க முடிந்ததே தவிர. 1948இல் சுதந்திரத்துக்குப் பின்னர்வந்த மிகச் சுருங்கிய காலத்திலேயே இச்சட்டப்பிரிவின் காப்பீடு சிங்கள அரசியல்வாதிகளாலே தகர்த்து எறியப்பட்டதென்பதே வரலாறு. 1970ஆம் ஆண்டுவரை சிங்கள அரசு தமிழர்களின் நலனுக்கெதிராகச் செய்த எந்தஒரு சட்டத்தினின்றும் பாதுகாப்பளிக்க இந்த 29ஆம் பிரிவுச் சட்டம் துணைக்கு வரவில்லை 1948இல். இலங்கைக் குடியுரிமைச் சட்டம் கொண்டு வரப்பட்டது. 9 இலட்சம் இந்தியத் தமிழர் குடியுரிமை யிழந்தனர். 1949இல் வாக்குரிமைஇழந்தனர். இக்குடியுரிமைச் சட்டம் அரசியலமைப்புச் சட்டத்தின் 29 ஆம் பிரிவுக்கு முரணானதென இலண்டனிலுள்ள கோமறைக் கழகத்துக்கு (பிரிவிக் கவுன்சிலுக்கு) முறையிடப்பட்டபோது இந்தவகைய சட்டம் நிறைவேற்ற இலங்கை அரசுக்கு உரிமை உண்டு என்றே கோமறைக் கழகம் தீர்ப்புச் சொன்னது. 1956இல, தனிச் சிங்களச் சட்டம் (சிங்கள ஆட்சிமொழிச் சட்டம்) கொண்டு வரப்பட்டது. இது அரசியற் சட்டத்தின் 29ஆம் பிரிவை மீறுகின்றதென்ற வழக்கு கோமறைக் கழகத்துக்குப் போனது. தனிச சிங்களச் சட்டம் 29ஆவது பிரிவை மீறுகின்றதென்ற தீர்ப்பையே கோமறைக்கழகம் வழங்கினாலும் இலங்கையில் சிங்கள அரசாங்கம் சோல்பரிசசட்டத்தைப் புறந்தள்ளி. மிக மூர்க்கமாகச் சிங்களம் மட்டும் சட்டத்தை நடைமுறைபபடுத்தியது. 29ஆம் பிரிவு. சட்டத்தினளவில் சிறுபான்மையோருக்கு எழுத்தில் அமைந்த காப்பீடு என்ற போதிலும் நடைமுறையிற் செயலற்றதாகவே அது இருந்தது.

அதுபோலவே.

01.) மூதவை (செனற்சபை) 02.) நியமன உறுப்பினர்கள்

03.) பல உறுப்பினர் தொகுதி 04.) கோமறைக்கழகம் (பிரிவிக்கவுன்சில்)

05.) சுதந்திரமான பொதுச்சேவை நீதிச்சேவைஆணைக்குழு

போன்றவையும். சிறுபான்மையினருக்குக் காப்பீடுகளாகச் சோல்பரி நினைத்தபோதும். சிங்களப் பேரினவாதத்தின் இன. மதப் பேரலையின்முன் இவை. ஒன்றுமே நின்று நிலைக்க முடியவில்லை. மூதவை நியமனம் சிங்களத் தலைமையமைச்சரின் பரிந்துரையில் ஆளுநராற் செய்யப்பட்டது இதனால. மூதவையும் சிங்களப் பெரும்பான்மையால் நிறைந்தது. நியமனம் பெற்ற ஓரிரண்டு




சிறுபான்மையோரும் வாய்மூடி இருந்தனர் அல்லது தமது நலன்பேண பெரும்பான்மைப் பக்கம் சரிந்தனர்.

குடியுரிமைச் சட்டம், தேர்தல் திருத்தச் சட்டம், தனிச் சிங்களச் சட்டம் என்பவை மூதவையின் முன்னே வந்தபோது சிங்களப் பெரும்பான்மை கண்ணை மூடிக்கொண்டு அவற்றை ஆதரித்தது. ஆதலால், போர்த்துக்கேய நடையர் வரவு வரை இலங்கைத்தீவின் ஒருபுறத்திலே தனியாட்சி செய்த தமிழினம், இலங்கையின் தேசிய ஒருமைப்பாட்டுக்குள்ளே தனது தனித்தன்மையை ஒருவாறு பேணக்கூடுமென்று எண்ணியிருந்த தமிழினம் தேசிய நீரோட்டத்தில் இருந்து விலகவேண்டிய காலக்கட்டாயத்திற்கு ஆளாகியது. பாராளுமன்றத்திற்கான நியமன உறுப்பினர்கள் சிறுபான்மையினரிலிருந்து தெரிவுசெய்யப்படுவது சிங்களப் பெரும்பான்மையின் வேகத்தைக் குறைக்குமென்று சோல்பரி வாதித்திருந்தாலும், நடைமுறையிலே அவரின் எதிர்பார்ப்புக்கு மாறாகப் பெரும்பான்மை இனத்தவரே நியமிக்கப்பட்டனர். மாறாகச் சிறுபான்மையினர் ஒருவர் இவ்வாய்ப்பைப் பெறும்பொழுதுகூட தமது இன நலனைப் புறக்கணித்து, பேரின நலன்பேண வாக்குறுதி செய்தவர்களாகவே பார்த்து நியமிக்கப்பட்டனர்

1970ஆம் ஆண்டு நியமன உறுப்பினரான எம்.சி.சுப்பிரமணியமும், மூதவை கலைக்கப்பட்டதன் பின் நியமன உறுப்பினரான செல்லையா குமாரசூரியரும் 1972 இல் உருவான இலங்கையின் "சிங்கள பௌத்த குடியரசு யாப்பை" ஆதரித்து, தமிழ் மக்களின் வாழ்வுரிமையைக் கேள்விக்குறியாக்குவதற்குக் காரணமாயினர். சிங்கள அரசின் எந்தவிதமான இனஒதுக்கல்களுக்கும் கை

உயர்த்தக்கூடிய "விசுவாச" அடிமைகளாகவே இவர்கள் தமிழ் மக்களால் இன்றும் (இறந்தபின்பும்கூட) கணிக்கப்படுகின்றனர். பாராளுமன்றத்துக்கான பல உறுப்பினர் தொகுதிகள் மூலம் சிறுபான்மையோர் தமது உறுப்புரிமையைப் பல்லினத் தேர்தல் தொகுதிகளில் உறுதிசெய்ய முடியுமென்று எதிர்பார்க்கப்பட்டது. கொழும்பு மத்தி, அங்கு வாழும் சிங்கள, தமிழ், முஸ்லிம் மக்களின் உறுப்புரிமையைக் கருத்திற் கொண்டு மூன்று உறுப்பினர் தொகுதியாக உருவாக்கப்பட்டது. மட்டக்களப்பு, மூதூர், அக்குறணை, பலாங்கொடை, பதுளை, கொழும்பு தெற்கு போன்றவை இரட்டை உறுப்பினர் தொகுதிகளாகக் காலத்துக்குக் காலம் மாற்றி



1948 இலங்கை சுதந்திர நாளில் டி.எஸ். சேனநாயக்காவால் ஏற்றப்பட்ட சிங்கக்கொடி

அமைக்கப்பட்டிருந்தன. சோல்பரி அரசியற் சட்டம் நடைமுறையில் இருந்த காலம் வரை, இத்தொகுதிகள் சிறுபான்மையோருக்கு எதிர்பார்க்கப்பட்ட உறுப்புரிமையை வழங்கவேயில்லை. குறிப்பாகச் சிங்கள மக்கள் பெரும்பான்மையினராக உள்ள தொகுதிகளில் இந்தக் காப்பீடு மண்ணைக் கவ்வியது. கோமறைக்கழகம் நீதிகோரும் சிறுபான்மையோருக்கு அதை வழங்குமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அதன் தீர்ப்புக்களின் செயற்பாடு வேறுபட்டதாகவே தான் இருந்தது. 1956இல், தனிச்சிங்களச் சட்டம் அரசியல் அமைப்பின் 29ஆம் பிரிவுக்கு முரணானது என கோமறைக்கழகம் தீர்மானித்தது. ஆனால், அதன்பிறகுதான் சிங்கள அரசு தனிச்சிங்களச் சட்டத்தை மிகுந்த முனைப்போடு நடைமுறைப்படுத்தியது. சுதந்திர காப்பீட்டை சிறுபான்மையோருக்குச் செய்யத்தவறியதாக சோல்பரி பிற்காலத்தில்

வருத்தப்பட்டாலும் அது காலங்கடந்த வருத்தமே. போராமல் கைகளிலே தாரைவார்க்கப்பட்ட ஆட்சிஉரிமையைக் கொண்டு தமிழர்களின் இன.மொழி.நில பண்பாட்டுக் கோலங்களை முற்றாக அழிக்க முனைந்த சிங்கள ஆட்சியாளர்களின் போக்கினால் ஏற்பட்ட இனமோதல்கள். இரத்தக்களரிகளைக் கண்டு இலங்கை தடுமாறிய வேளையிலேயேதான். தமது மேலோட்டமான பார்வையின் அறுவடையைக்கண்டு சோல்பரி கவலைப்பட்டார் 1948ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 4ஆம் நாள் பிரித்தானிய முடிக்குக் கீழான சுதந்திரம் இலங்கைக்கு வழங்கப்பட்டது. முதலாவது தலைமை அமைச்சராக (பிரதமராக) டி.எஸ். சேனநாயக்கா சிங்கக் கொடியை ஏற்றினார்.

இந்தச் சுதந்திரத்திற்கான செயற்பாட்டிற் சிங்களவர்களுக்கு உரிய பங்களிப்பு எத்தகையது என்பது கேள்விக் குரியதாகும். 1948ஆம் ஆண்டுக்குப் பின்னால் திடீரென சிங்களத் தலைவர்களின் மூளைக்குள் முளைத்த சிங்களத் தேசிய உணர்வு சுதந்திரத்திற்கு முற்பட்ட நாட்களில் பெரிதாக இருந்ததில்லை

1927ஆம் ஆண்டு இலங்கைக்குவந்த நவபாரதத்தின் தந்தை மகாத்மாகாந்தி தனது உரையில் இதை வெளிப்படையாகவே கூறினார். "எந்தவொரு சிங்களவரினதும் வாயிலிருந்தும் சுதந்திரம் என்ற பேச்சைக்



## மகாத்மாகாந்தி 1927இல் யாழ் வருகை தந்தபோது

**கடந்த 15நாட்களில் நான் கேட்கவில்லை. இங்கு (யாழ்ப்பாணத்திற்கு) வந்த பிறகு தமிழர்களின் வாயிலிருந்துதான் சுதந்திரம் என்ற வார்த்தை வரக் கேட்கின்றேன்."** மகாத்மா காந்தியின் கூற்று இது. 1948இல் கிடைத்த சுதந்திரத்தைத் தனது செல்லக் குழந்தையாகவே சிங்களத் தலைமை நினைத்தது இலங்கைக்கு என்று ஒரு தேசியக்கொடி வரையப்படாத நிலையில். கண்டியின் கடைசி மன்னன் "கண்ணுச்சாமி" ஏந்திய கொடியான "சிங்கக்கொடி"தான் கொழும்பு சுதந்திர சதுக்கத்தில்ஏற்றப்பட்டது. நாடு முழுவதும் "சுதந்திரதினக் கொண்டாட்டத்துக்குக் கொடியேற்றுவது பற்றிய ஒரு சுற்றறிக்கை அமைச்சினால் அனுப்பப்பட்டது. சுதந்திரதினக் கொண்டாட்டத்தின்போது சிங்கக்கொடி ஏற்றமுடியாத நிலையிருப்பின் விருப்பினால் பிரித்தானியரின் "யூனியன்யாக்" கொடியை ஏற்றலாம் ஆனால். எக்காரணம் கொண்டும் நந்திக் கொடி ஏற்றப்படக்கூடாது" என்று கண்டிப்பான உத்தரவு வழங்கப்பட்டது. நந்திக்கொடியே யாழ்ப்பாணத் தமிழ

இராச்சியத்தின் கொடி. 13ஆம் நூற்றாண்டிலிருந்து 17ஆம் நூற்றாண்டுவரை யாழ்ப்பாண அரசின் கொடியாகவும் தமிழர்களின் இறைமையைத் தாங்கிநின்ற கொடியாகவும் மிளிர்ந்து வந்தது நந்திக் கொடியே. சுதந்திரம் கிடைத்த நாளிலிருந்தே தமிழரின் அடையாளத்தை அழித்து ஒழிக்க முனையும் சிங்களப் பேரினவாதச் செயற்பாடு தொடங்கிவிட்டது என்பதற்கு இது பொருத்தமானதொரு சான்றாகும். இதனைத் தொடர்ந்து தமிழர்களின் நில,மொழி,கல்வி,பண்பாட்டு உரிமைகளைப் பறிக்க சிங்கள அரசுகள் திட்டமிட்டுச் செய்த கொடிய நடவடிக்கைகள் மனித நாகரிக நிலவுகின்ற எங்குமே நடந்ததில்லை.

1948 இல் இருந்து 1956 வரையுள்ள 8ஆண்டுகள் இலங்கை அரசியலில் புதுமையான பொறுமையை வகித்து வந்தது. டீ.எஸ். சேனநாயக்காவினால் தொடக்கப்பட்ட ஐக்கியதேசியக் கட்சியே "மக்கள் எல்லோராலும் மக்கள் எல்லோரினதுமான அரசாங்கம்" என்று டீ.எஸ். சேனநாயக்காவின தொடக்கால உறுதியை சோல்பரியிலிருந்து தமிழ்த்தலைவர்கள் வரை நம்பினார்கள் அல்லது நம்பவைக்கப்பட்டார்கள். அதனாற்றான் 50இற்கு 50 என்ற தனது கோரிக்கையில மிக உறுதியாக வாதிட்ட அகில இலங்கைத் தமிழ்க் காங்கிரசின் தலைவர் ஜீ.ஜீ.பொன்னம்பலம் தனது கட்சியினருடன் அரசாங்கக்கட்சி வரிசையிலேபோய் உட்கார்ந்தார்.

டீ.எஸ் சேனநாக்கா உள்ளூர் சிங்களக் குடியேற்றங்களை மிக விரைவாகக் கொண்டு நடத்தி, தமிழர் நிலங்களைப் பிடுங்கி சிங்களமயமாக்கும் கொள்கையைக் கொண்டிருந்தாலும், அனைத்து மக்களுக்குமான இனமத உரிமைகளைப் பேணுகின்ற ஒரு உத்தமமான அரசியல் தலைவராகவே தம்மைக் காட்டிக்கொள்ள முயற்சித்தார். புத்த சாசனத்திற்கு அரசியல் அமைப்பில் முதன்மையிடம் வழங்கவேண்டும் என்ற கோரிக்கையோடு வந்த புத்த பிக்குகளிடம் "மூன்று மணிகளான புத்தம், தர்மம் சங்கம் என்பவற்றோடு நான்காவதாக ஒன்றைச் சேர்க்கப்போகிறீர்களா?" என்று கிண்டல் செய்து அவர்தம் கோரிக்கையைப் புறந்தள்ளியதாக நம்பப்படுகின்றது. (**SRI LANKA AFTER INDEPNDENCE** "சிறிலங்கா ஆஃப்டர் இன்டிபெண்டன்ஸ்" என்ற நூலின அடிக்குறிப்பு 8 எழுதியவர் சின்னப்பா அரசரத்தினம்)

## மலையகத் தமிழர் வாழ்வுரிமைக்கு டீ.எஸ் வைத்த கத்தி

சோல்பரி அரசியல் திட்டத்தின்படி இலங்கைப்பாராளுமன்றத்தில் மலையகத் தமிழர்களின் உறுப்புரிமை 14 ஆக இருக்குமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், முதலாவது பாராளுமன்றத்தேர்தலில் 7மலையகத் தமிழர்கள் மட்டும் உறுப்புரிமை பெற்றனர். அந்த 7 உறுப்பினர்களுமே தனக்கு எதிர்வரிசையில் இருந்தது டீ.எஸ் சேனநாக்காவின் கண்களைக் குத்தவே செய்தது. வெறும் கூலிகளாகச் சிங்கள மேலமட்டத்தினரின் கண்களுக்குத் தென்பட்ட இந்தியத் தமிழர்களின் அரசியல் உறுப்புரிமை நீக்கப்பட வேண்டுமென்றும் அதன்மூலம் பாராளுமன்றத்தில்

சிங்களப்பெரும்பான்மையைக் கூட்டுவதோடு தமிழர்களை வலுக்குறைந்தவர்களாக்க வேண்டும் என்னும் குறிப்பாகத் தனது அரசுக்கு எதிரானவர்களின் வலுக்குறைக்கப்படவேண்டும் எனவும் டி.எஸ். சேனநாயக்கா கணக்குப் போட்டார். அதன் விளைவாக 1948 இல் இலங்கைக் குடியுரிமைச் சட்டம் இல 18 நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. அதனால், மலையகத் தமிழர்கள் 900,000 பேர் தமது குடியுரிமையைத் திடீரென ஒரேநாளில் இழந்தனர். இலங்கைக்கான சுதந்திரக் கோரிக்கையின்போது இலங்கைக்குச் சுதந்திரம் வேண்டுமானால்



அனைத்து இனத்தவரும் ஒற்றுமையாகக் கோரவேண்டும்" என ஆங்கிலேயர் தட்டிக்கழித்தபோது சுதந்திரத்தின் பின் தமிழர் உரிமைகள் வழங்கப்படுமென்று கூறி டி.எஸ். சேனநாயக்கா அன்று தமிழர் ஒத்துழைப்பைக் கோரினார். அரசியலமைப்பு முன் வரைவின்படி 58:43 பிரதிநிதித்துவம் பேணப்பட்டால் அது சிறுபான்மையினருக்குப் பெரும் பாதுகாப்பே என எண்ணியிருந்த தமிழருக்குத் டி.எஸ். சேனநாயக்காவின் குடியுரிமைச் சட்டம் பேரிடியாக அமைந்தது.

58:43 என்ற சிங்களவர்கள், தமிழர்கள் விகிதாசார எதிர்பார்ப்பு முதலாவது தேர்தலின் போது 1947 இல் 67:33ஆகத்தான இருந்தது. மலையகத் தமிழரின் குடியுரிமை பறிப்பினால் அடுத்த தேர்தலின் பின் (1952இன்பின்) அது 73:28 ஆகக்குறைந்தது. சுதந்திரத்திற்குப் பின் டி.எஸ். சேனநாயக்கா திட்டமிட்டு மேற்கொண்ட இச் செய்கைதான் சோல்பரியின்29(2) எனும் சிறுபான்மையினத்தவருக்கான பாதுகாப்பு அரணை உடைத்துச் சுக்குநூறாக்கியது. இதற்கான வழக்கு சோல்பரி அரசியலமைப்பு பிரிவு 29(2)இன் கீழான சிறுபான்மையோரின் காப்பீட்டுக்கு முரண்பட்டது என்ற வாதத்தோடு கோமறைக்கழகத்தில் வைக்கப்பட்டது. சுதந்திரத்தின் பின்னால் தமிழர்களுக்கு விளைந்த முதலாவது பேரிடியாக, குடியுரிமைச் சட்டத்திற்குச் சார்பாகவே கோமறைக்கழகம் தீர்ப்பளித்தது. இச்சட்டமூலம் பற்றிய விவாதம் நடைபெற்ற வேளைகளிலெல்லாம், 'குடியுரிமை இழப்பால் வாக்குரிமைக்கு எவ்வித பாதிப்புமில்லை' என்ற அரசியல் வாக்குறுதிகள் டி.எஸ். சேனநாயக்காவினாலும் ஐக்கிய தேசியக்கட்சியினாலும் கபடநோக்கத்துடன் வழங்கப்பட்டன. ஆனால், சொன்ன வேகத்திலேயே இந்த வாக்குறுதி காற்றிலே பறக்கவிடப்பட்டது. 1949 இல் தொடர்ந்து நிறைவேற்றப்பட்ட இந்திய பாக்கிஸ்தானிய வதிவுரிமைச்சட்டம் இல 3 இனாலும் தேர்தல் திருத்தச்சட்டம் 48 இனாலும் இந்தியத் தமிழரின் வாக்குரிமை பிடுங்கப்பட்டுவிட்டது. இந்தக் கொடிய சிங்களப பேரினவாதச்சட்டங்களினால் 7 உறுப்பினர்களை நாடாளு

மன்றத்துக்கு அனுப்பும் வலுவைக் கொண்டிருந்த மலையகத் தமிழர்கள் 1952 ஆம் ஆண்டின் 2ஆவது நாடாளுமன்றத்தில் தமது உறுப்புரிமையை அறவே இழந்தனர்.

## மலையகம் இழந்த உறுப்புரிமை

இந்தியத் தமிழர்கள் பெரும்பான்மையினராக இருந்த தேர்தல் தொகுதிகளில் மிகச் சிறுபான்மையினராக விளங்கிய சிங்களவர் உறுப்பினர்களாக வெற்றிக்கொடி நாட்டி (முதலாவது தேர்தலில் 67ஆக இருந்த) தமது உறுப்புரிமையை 2ஆவது தேர்தலில் 73ஆக உயர்த்திக் கொண்டனர். ஆங்கிலேயரது ஆட்சிக்காலத்தில் தோட்டக் கூலிகளாகக் கொண்டுவரப்பட்ட இந்தத் தமிழர்களுக்கு இலங்கையில் எவ்வித உரிமையும் இல்லையென்பதும் அவர்களது வேர்வழி நாடான இந்தியாவிற்குச் செல்ல வேண்டும் என்பதும் சிங்களப் பேரினவாதத்தின் அன்றைய பெருங்கூச்சலாகவிருந்தது. மலையகத் தமிழர்கள், இலங்கைத் தமிழர்கள், நடுநிலையாளர்களின் இதற்கெதிரான சொல்லாடல்கள், செயல்வழிப்போராட்டங்கள் அனைத்துமே செவிடன் காதில் ஊதிய சங்கென வீணாகிப் போயின

ஆனால், இந்தியத் தமிழர்களை இலங்கைக்குக் கொண்டு வருவதில் முன்நின்று உழைத்தவர்களும் இந்தப் பேரினவாதச் சிங்களவர்களேதான். இந்தியத் தொழிலாளர்களைக் கொண்டுவருவதற்கு எதிராக 1937 இல் இடதுசாரிக் கட்சியைச் சேர்ந்த என்.எம்.பெரேரா அரசாங்க சபையில் ஒரு தீர்மானத்தை முன்மொழிய,



எஸ்.எம். சுப்பையா (பதுளை) கே.குமாரவேலு (கொட்டகலை) தொண்டமான் (நுவரெலியா)

அதை எதிர்த்து இந்தியத் தொழிலாளர்களை இலங்கைக்குக் கொண்டு வரவேண்டுமென்று வாக்களித்தவர்களில் முதன்மையானவர்கள் பின்னர் மலையகத் தமிழர் குடியுரிமைப் பறிப்புக்கு ஆதரவாக வாக்களித்த டட்லி சேனநாயக்கா, எஸ்.டபிள்யு.ஆர்.டி பண்டாரநாயக்கா ஆகியோர் ஆவர். டீ.எஸ்.சேனநாயக்கா, ஜே.ஆர் ஜெயவர்த்தனா சேர் ஜோன் கொத்தலாவல ஆகியோர் வாக்களித்த போது அரசாங்கசபையில் அன்று இல்லாவிடினும் அவர்களும் இந்தியத் தொழிலாளர்கள் கொண்டுவரப்பட வேண்டுமென்பதில் அன்று பிடிவாதமாக இருந்தவர்களே.

சிங்களப் பேரினவாதத்தின் ஆலோசனையுடன் இலங்கைக்குக் கொண்டு வரப்பட்ட அப்பாவி இந்திய தமிழ்த் தொழிலாளர்கள் கால்நடைகள்போல அழைத்து வரப்பட்டு, வழிகளில் மலேரியா போன்ற கொடிய நோயில் மடிய, எஞ்சியோர் ஆடு,மாடுகள் கூட உறங்கமறுக்கும் லயங்களுக்குள் வாழ்ந்து. அட்டைக்கடி களை ஏற்று, பனிக்குளிரில் கொழுந்து கிள்ளி, காடுகளைக் கழனியாக்கி இலங்கையின் பொருளாதார முதுகெலும்பை நிமிரவைத் தனர். ஆனால், வலிந்து அவர்களைக்கொண்டு வந்த சிங்களப் பேரினவாதம் 48,49ஆம்ஆண்டுகளில் கொடிய குடியுரிமைச்சட்டங்களால் அவர்களை "நாடற்றவர்களாக் கியது" இந்திய அரசின் கடும் எதிர்ப்பையும் புறக்கணித்து விட்டு, தமது இனமத அரசியல் நலன்களுக்காக இந்தியத் தமிழர்களின் முதுகிலே ஈனத்தனமாகக் குத்தியது சிங்களப் பேரினவாதமே.



சேர் ஜோன் கொத்தலாவல



டட்லி சேனநாயக்கா



சுதந்திரன்

SUVANTIRAN

சத்தியாக்கிரகத் தொடர்பில் போலீஸ்

மலையகத் தமிழரின் சத்தியாக்கிரகம் பற்றிய பத்திரிகைச் செய்தி 1952

### ஐக்கிய தேசியக் கட்சியை விட்டு வெளியேறல்

இலங்கை சுதந்திரம்பெற்ற காலத்தில் டீ.எஸ். சேனநாயக்காவின் நம்பிக்கைக்குரியவராக இருந்த எஸ்.டபிள்யூ ஆர்.டி. பண்டாரநாயக்கா 1951 இல் பிரிந்து போய் 2ஆவது பேரினவாதக் கட்சியாக சிறீலங்கா சுதந்திரக் கட்சியைத் தொடங்கினார். மாறிமாறி ஆட்சிக்கு வந்த ஐ.தே.க., சி.ல.சு.க ஆகிய இரண்டுமே தமது அரசியல் வெற்றியை "தமிழர்களின அழிவிலிருந்தே" அறுவடைசெய்து கொண்டன. சிங்களப்பொது மக்களினது மனதிலே இன, மத வெறியைத் தூண்டிவிட்டு சிங்கள பௌத்த மேலாண்மைத் தத்துவத்தில் ஊறிய பௌத்தமகாசங்கங்களைத் மனங்குளிரவைத்துமே தமது அரசியல் இருப்பை அவர்கள் தக்கவைக்க முயன்றனர்.

ஐக்கிய தேசியக் கட்சியிலிருந்து எவ்வகையிலேனும் ஆட்சி உரிமையைக் கைப்பற்ற நினைத்த எஸ். டபிள்யு. ஆர்.டி பண்டாரநாயக்கா தனது வாக்கு வங்கியைக் கொழுக்கவைக்கும் நோக்கில் கடைந்தெடுத்த இனவெறியராக மாறினார்.

"நான் பிரதமரானால் 24மணி நேரத்தில் சிங்களம் மட்டும் சட்டத்தைக் கொண்டுவருவேன்" என்று மேடைகளில் முழங்கினார். வெற்றியும் பெற்றார். இந்த அரசியல் இனவாதத்திற்கு புத்தரகிததேரோ போன்ற இனவெறிப் புத்தபிக்குகளின் துணையை உழைப்பையும் அவர் பெற்றுக்கொண்டார்.

பௌத்த மதத்திற்கும் சிங்கள மொழிக்கும் முதன்மை இடம் கொடுக்கப்பட வேண்டுமென்ற முழக்கம் டி.எஸ்.சேனநாயக்காவின் காலத்திலேயே இருந்தது தான். ஆனால், ஆங்கில மேல்பட்ட அரசியல் தத்துவத்திற்கு செழித்திருந்த சிங்களத் தலைவர்கள் இந்த முழக்கங்களை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லையெனினும், பௌத்தர்ங்கத்தை நீண்ட காலம் அடக்கிவைத்திருக்க அவர்களால் முடியவில்லை. 1954இல் இக்கோரிக்கை கூர்மையானதைத் தொடர்ந்து சூழ்நிலையை நன்கு புரிந்து கொண்ட முன்னாள் கிறித்தவரான எஸ்.டபிள்யூ.ஆர்.டி பண்டாரநாயக்கா பௌத்த துறவிகளை விட ஒருபடி மேலேயே போய், தன்னைப் பௌத்த இலங்கைக் காவலனாகக் காட்டியே, 1956 ஆம் ஆண்டு தேர்தலை வெற்றி கொண்டு ஆட்சியிலமர்ந்தார்.

ஆட்சியிலமர்ந்த மூன்று மாதங்களுக்குள் ஜூன் 56இல் "சிங்களம் மட்டும்" என்ற ஆட்சிமொழிச்சட்டத்தை நிறைவேற்றினார். 1948இல் இந்தியத் தமிழர்களின் எதிர்காலத்தின் மேல் விழுந்த இடிபோல, 1956இல் இலங்கையின் முழுத்தமிழர்களின் மேலும் விழுந்தது சட்ட ரீதியான பங்களிப்பைத் தமிழும், தமிழர்களும் முற்றாக இழக்க நேரிட்டது தமிழர்கள் இலங்கைத் தமிழரசுக் கட்சியின் கீழ் அணிதிரண்டு இந்தச் சட்டத்தை எதிர்த்துப் போராடினார்கள். காலிமுகத்திடலிலே பாராளுமன்றத்திற்கு முன்னர் மௌனவழிப் போராட்டம் நடத்தினர். இதனைத் தொடர்ந்து, கிளர்ச்சி செய்த தமிழர்களின்மேல், சிங்களக் குண்டர்களின் தாக்குதல் மிகக்கொடுமையாக நடாத்தப்பட்டது. சிங்களக் குண்டர்களினதும், ஆயுதப்படையினரதும் தமிழர்கள் மீதான வெறியாட்டத்தை எஸ்.டபிள்யூ.ஆர்.டி பண்டாரநாயக்கா பாராளுமன்றப் பல்கணியில் நின்று வேடிக்கை பார்த்து நையாண்டி செய்தார்.

இனவன்முறை கொழும்பிலும், இலங்கையின் பலபகுதிகளிலும வெடித்துப் பரவியது. தமிழ் சிங்களம் இரண்டும் இலங்கை முழுவதற்குமான ஆளுகை மொழிகளாக்கப்படவேண்டுமென்ற கோரிக்கையில் தமிழரசுக் கட்சி உறுதியாக நின்றது இடதுசாரிகளும் இந்தப் பொருந்தாச் சட்டத்தை எதிர்த்துக் குரல் கொடுத்தனர். இந்தச் சிங்களம் மட்டும் சட்டத்திற்கு 2/3 பங்கு ஆதரவு கிடைக்கவில்லை எனினும், சோல்பரியின 2/3 பங்கு காப்பீடு ஏட்டளவிலேயே நின்றது. இதற்கு எதிராக கோமறைக்கழகத்தில் தொடுக்கப்பட்ட வழக்கில் தமிழர்

1956இல் தந்தை செல்வா தலைமையில் காலிமுகத்திடலில் நடைபெற்ற அறப்போர்






சிங்களக் குண்டர்களின் தாக்குதலில் காயமடைந்தவர்கள் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்படுகின்றனர்.

வென்றனர். ஆனால், நடைமுறையில் சிங்களம் மட்டுமே வென்றது இவ்வன்முறையில் தமிழர்கள் தமது உடைமை, உயிர்களைப் பெருமளவு இழந்தனர். எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயக்கா சிங்களவர்களின் வன்முறைகளைக் கண்டும் காணாதவராகச் சில நாட்கள் இருந்துவிட்டு, வெளிநாடுகளின் அழுத்தங்களின் பிறகுதான் அதனைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரச் செயற்பட்டார். எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயக்கா மட்டுமல்ல, சிங்களத் தலைவர்கள் அனைவருமே தமிழ்மக்கள் தமது உயிர், உடைமைகளை இழந்து அல்லற்படுவதைப் பார்ப்பதில், ஒருவித "குரூரத் திருப்தியை" எப்போதுமே அடைந்தனர்.

மிகப்பெரிய துன்பத்தை இனவன்முறை அளித்தபோது, தமிழர்கள் மிக உறுதியாகச் சிங்களம் மட்டும் சட்டத்தை எதிர்த்துப் போராடியதால், எஸ்.டபிள்யூ.ஆர்.டி பண்டாரநாயக்கா கொஞ்சம் இறங்கி வந்து தமிழரசுக்கட்சியுடன் ஓர் உடன்படிக்கையையும் செய்ய முனைந்தார். இந்த உடன்படிக்கைதான் மிகவும் பேசப்படும் "பண்டா, செல்வா" உடன்படிக்கையாகும். **ஏற்கெனவே இரண்டுமுறை உடன்படிக்கை என்ற பெயரில் சிங்களத் தலைமையால் ஏமாற்றப்பட்ட பட்டறிவை தமிழ்த் தலைமை கொண்டிருந்தும் வழங்கியவாக்குறுதிகளிலிருந்து பல தடவைகள் ஏமாற்றப்பட்டிருந்தும் ஒன்றிணைந்த இலங்கையென்ற கொள்கையிலிருந்து இன்னும் விடுபடாததால், பண்டா, செல்வா உடன்படிக்கை 26 யூலை 1957 இல் செய்யப்பட்டது.**



# தமிழர்களை ஏமாற்றிய மூன்றாவது உடன்படிக்கை. 1957

சமஷ்டி அரசியலமைப்பு ஒன்றை ஏற்படுத்தவோ, சிங்களம் மட்டும் சட்டத்தை மாற்றவோ, பிராந்திய சுயாட்சி வழங்கவோ, முன்னாள் சமஷ்டிக் கோரிக்கையாளரான எஸ்.டபிள்யூ ஆர்.டி பண்டாரநாயக்கா கண்டிப்பாக மறுத்து விட்டார். அவரே வளர்த்து விட்ட இனவெறிப் பூதம் அவரை விழுங்கக் கூடும் என்பதை அவர் நன்கு அறிந்ததே மறுப்புக்கான உடனடிக்காரணமாகும். மொழிக்குச் சம உரிமை என்ற நிலையிலிருந்து தமிழரசுக்கட்சி இறங்காத போதும், சட்டத்தில் சில சீரமைவினைச் செய்வதற்கு அது ஒப்புக் கொண்டது. இலங்கைத் தேசிய சிறுபான்மையினரின் மொழியாகவும் வடக்கு கிழக்கு மாகாணங்களில் ஆளுகை மொழியாகவும் தமிழ் மொழியைச் சட்டச் சீரமைப்பில் உட்சேர்க்க எஸ்.டபிள்யூ.ஆர்.டி. பண்டாரநாயக்கா ஒருப்பட்டார். இந்தியத் தமிழர்கள் பற்றி விரைவான கவனம் செலுத்தி முடிவுசெய்வதாகவும் வாக்குறுதி அளித்தார்.



பண்டா – செல்வா உடன்படிக்கைக்கான பேச்சுவார்த்தை

விவசாயம், கூட்டுறவு, காணியும் காணிமேம்படுத்தலும், குடியேற்றமும், கல்வி, சுகாதாரம், கைத்தொழில்கள், மீன்பிடி, வீடமைப்பு, சமூகசேவைகள் போன்ற துறைகளில் அமைக்கப்படவிருக்கும் பிராந்தியசபைகளுக்கு வேண்டிய

அதிகாரங்கள் வழங்கப்படுமெனவும் பிராந்திய சபையின் அதிகார எல்லைக்குட்பட்ட பகுதிகளில குடியேற்றம செய்வதற்கான ஆட்களைத் தெரிவுசெய்யும் அதிகாரமும் அத்தகைய குடியேற்றத்திட்டங்களில் பணிபுரிவதற்கான ஆட்களைத்



ஜே.ஆரின் கண்டிநோக்கிய பாதயாத்திரை இம்புல் கொடைவில் எஸ்.டி.பண்டாரநாயக்காவால் தடுத்து நிறுத்தப்பட்டது.

தெரிவுசெய்யும் அதிகாரமும் பிராந்தியசபைக்கு வழங்கப்படுமெனவும் கூன்போறவா வரிவிதிக்கவும் சபைகளுக்கு அதிகாரம் இருக்குமெனவும் இவ்வுடன்படிக்கையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

### தான் செய்த உடன்படிக்கையை தானே கிழித்த பண்டா

இதைத் தொடர்ந்து சிங்கள, பௌத்த தீவிரவாதிகளும் அரசியல் எதிரிகளும் இனவாதத்தைக் கக்கத்தொடங்கினர். பிற்காலத்தில் இலங்கையில நிறைவேற்று அதிபராகவந்த ஜே.ஆர் ஜெயவர்த்தனா உடன்படிக்கையை எதிர்த்துக்கண்டியாத்திரை கிளம்பினார். எஸ்.டபிள்யூ. ஆர்.டி. பண்டார நாயக்காவின் வீடுநோக்கி பௌத்தபிக்குகள், பண்டாரநாயக்காவின் அமைச்சர்களில் ஒருவரான விமலா விஜயவர்த்தனா உட்பட ஏராளமான சிங்களவெறியர்கள் படையெடுத்தனர்.

இதைத்தொடர்ந்து சிங்களத்தலைமை தான் செய்து கொண்ட உடன்படிக்கை மீண்டும் தமிழர்களை மூன்றாவது முறையாக ஏமாற்றியது.

எஸ்.டபிள்யு.ஆர்.டி. பண்டாரநாயக்கா தன்னைச்சூழ்ந்து நின்ற பௌத்த பேரினவாதப் பிக்குகளின் முன்னே உடன்படிக்கையின் படியைத் தன்னெண்ணப்படி கிழித்து எறிந்தார். அதுமட்டுமன்றி, காலங்காலமாகச் சிங்களத் தலைமை செய்துவந்ததைப்போல உடன்படிக்கை கிழித்தெறியப்பட்டதற்கான காரணத்தையும் தமிழர்களின் மீதே சுமத்தினார். தமிழர்கள் சிங்களத் தலைமை மீது முற்றாக நம்பிக்கை இழப்பதற்கும், ஏற்கெனவே இரண்டு இனங்களுக்கிடையில் வளர்ந்து வந்த விரிசல் மேலும் விரிந்து செல்வதற்கும் இந்த உடன்படிக்கை காரணமாகியது. இலங்கையின் ஒரு பகுதியில் ஆட்சியமைத்து நீண்டகாலமாகப் பெருமையோடு வாழ்ந்த உரிமைக்குரிய தமிழினத்துக்கு, அரைகுறைச்சலுகைகளைத்தானும் வழங்குவதற்குச் சிங்கள பௌத்த பேரினவாதம் தயாராக இல்லை என்பதைப் புரிந்து கொள்ள, இந்த உடன்படிக்கை கிழிப்பு, ஒரு முழுமையான சான்றாக அமைந்தது.

தினகரன்
The Thinakaran

பண்டாரநாயகா-செல்வநாயகம் ஒப்பந்தம் உயிரிழந்தது

தேச மக்களுக்கு வானொலி மூலம் பிரதமர் அறிவிப்பு

பண்டாரநாயக்கா–செல்வா ஒப்பந்தம் உயிரிழந்தது
தினகரன் பத்திரிகைச் செய்தி.




பண்டாரநாயக்கா தனது இனவெறிப் பூதங்களில் ஒன்றான புத்தரகித்த தேரோவினால் 59செப்ரம்பர் 26இல், அவரது 'றோஸமிட் பிளேஸ்' இல்லத்தில் வைத்துச் சுட்டுக் கொல்லப்பட்டார்.

### சிங்களப் பேரினவாதம்
### கட்டவிழ்த்துவிட்ட இனவெறித்தாக்குதல்

சிங்களம் மட்டும் சட்டத்தை மிக மூர்க்கமாகச் சிங்கள அரசு மேற்கொள்ளத் தொடங்கியதும் தமிழர்கள் பல்வேறு வழிகளிலும் எதிர்த்துக் கிளர்ச்சி செய்யத்தொடங்கினர். தமிழர்களின் மென்முறைக் கிளர்ச்சிகளைப் பொறுத்துக் கொள்ளாத சிங்களப்பேரினவாதம் தனது குண்டர்களை ஏவ, பெரும் இனக் கலவரம் வெடித்தது. 1958யூனில், கொழும்பிலும் பிற சிங்களப் பகுதிகளிலும் தோட்டப்பகுதிகளிலும் வாழ்ந்த தமிழ் மக்கள் மிகக் கொடிய முறையில் தாக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். அவர்களது வீடுகள், கடைகள் உடைத்து நொருக்கப்பட்டன. தமிழர்கள் வீதிகளில் இழுத்துவரப்பட்டு டயர்போட்டு உயிரோடு கொளுத்தப்பட்டனர்.

பெண்கள் பாலியல் வல்லுறவுக்கு உட்பட்டனர். தமிழர் கோவில்கள் அடித்துச் சிதைக்கப்பட்டன. இந்துக்கோவில் குருக்கள் கொதிக்கும் தார்ப் பீப்பாக்குள் அமுக்கிக் கொல்லப்பட்டார். குழந்தைகள் கூட அவலமாக உயிர் இழந்தனர். ஒரு காலத்தில் தமிழரான சேர்.பொன் இராமநாதனைத் தேரிலே வைத்துச் சிங்களத் தலைவர்கள் வடம்பிடித்து இழுத்துச் சென்ற தேசத்தில், செத்துக் கிடந்த தமிழனை நாய் இழுத்துச் சென்றது. தமிழர்கள் அடைக்கலம் புகுந்த முகாம்களைக் கூடச் சிங்களக் காடையர்கள் விட்டு வைக்கவில்லை.

ஆயிரக்கணக்கான மக்கள் கப்பலிலே ஏற்றப்பட்டு, அவர்கள் வடக்கு கிழக்குத் தாயக நிலமான யாழ்ப்பாணத்துக்கு அனுப்பிவைக்கப்பட்டனர். சிங்களப் பெரும்பான்மைத்தலைமை தமிழரது தாயகக் கோரிக்கையை ஏற்காதுவிடினும்,




தமிழ் மக்களைப் பாதுகாப்புக்கென்று யாழ்ப்பாணம் அனுப்பி வைத்ததன்மூலம் வடக்குக் கிழக்குத்தமிழரின் தாயகம் என்ற உண்மையை அவர்களது உள்மனம் ஏற்றுக் கொண்டமையையே இச்செய்கை காட்டுகின்றது.

இந்த இனவெறித் தாக்குதலின் எதிர்விளைவாக வடக்கில் வாழ்ந்த ஒருசில சிங்களவர்களின் உடைமைகளுக்குச் சேதம் விளைந்திருப்பினும் ஒரு சிங்களவர்தானும் தமிழ்ப் பகுதியில் கொல்லப்படவில்லை. சிங்களவர்கள் பாதுகாப்பிற்காகக் கப்பல்களில் ஏறிக் கொழும்பு சேர்ந்தனர்.

இந்தக் கொடுமையான இனவெறித்தாக்குதல் சிங்களப்பகுதிகளில் வாழ்ந்த தமிழர்களின் மனதில் உறைக்கக் கூடிய ஒரு எச்சரிக்கையைச் சொல்லியது. இந்தத் தமிழர்கள் அவர்களுடைய அரசியற் போராட்டங்களின்போதெல்லாம் சிங்களப் பெரும்பான்மையின் இன, மத வெறியின் பணயக் கைதிகளாகவும், நேரடியாகத் தாக்கப்படுநர்களாகவும் இருக்கப் போகிறார்கள் என்பதே அந்த எச்சரிக்கை. அந்த எச்சரிக்கையைப் பின்வந்த பல்வேறு இனவெறித்தாக்குதல்கள் மிகத் தெளிவாக நிறுவிக்காட்டின.

அரசு இந்தக் கலவரத்தை நான்கு நாட்கள் நீடிக்க அனுமதித்துப் பேசாதிருந்தது. அதன் பிறகுதான் நெருக்கடி நிலைப் அறிவிக்கை செய்தது.

இவ்வறிவிக்கை கூட அரசின் ஒரு பொம்மைப் பொறிப்பி (முத்திரை)யாக இருந்த ஆளுநரின் தலையீட்டாலும் முன்நடவடிக்கையாலுமே நிகழ்ந்ததெனபதைத் தமிழர் ஒவ்வொருவரும் தெரிந்து கொண்டபோது, இனிமேல் சிங்களவர்களோடு சேர்ந்து வாழமுடியாது என்ற உணர்வும், இலங்கை ஒருமைப்பாட்டில் பாரிய உடைவும் ஏற்பட்டது இது தவிர்க்க முடியாததுங்கூட சிங்கள ஆட்சியாளரின் அவசரகாலச் சட்டவிதிகளின மூடுதிரைக்குள்ளே அன்றைய தமிழ்த் தலைவர்களை வீட்டுக்காவலில் வைத்துவிட்டு, 'தமிழ் மொழிக்குச் சில அங்கீகாரங்களை வழங்குவதாகக் கூறி', தமிழ் மொழி நியாயமான பாவனை என்னுமோர் சட்டத்தை எஸ் டபிள்யூ ஆர் டி பண்டாரநாயக்கா நிறைவேற்றினார்.

இதுவெறும் கண்துடைப்பு என்பது மட்டுமல்ல இந்தச் சட்டமூலம் சட்டமாக்கப்படவுமில்லை; நடைமுறைக்கு வரவுமில்லை பண்டா செல்வா

## பண்டாரநாயக்காவைச் சுட்டுக்கொன்ற வழக்கில் தண்டனை பெற்றோர்.


புத்தரகித்த தேரோ


சோமராம தேரோ


எச்.பி.ஜெயவர்த்தன

உடன்படிக்கையில் ஒப்புக் கொள்ளப்பட்ட சிறிதளவு உரிமைகூட இந்தக்கண் துடைப்புச் சட்டத்தில் இருக்கவில்லை. தமிழர்களுக்கு உரிமை என்ற பெயரில் ஓர் எள்ளைக் கூடக் கொடுப்பதற்கு சிங்கள அரசியல்வாதிகளும் இனவாதப் பௌத்த மடங்களும் தயாராக இல்லை என்பதைப் புரிந்து கொண்ட தமிழர்கள், கொதித்துப் போராடக்கிளம்பியதில் வியப்பொன்றும் இல்லை.




இலங்கை இனமுரண்பாட்டிற் கொதித்துக் கொண்டிருந்த வேளையிற்றான். பீ.எச். பாமர் என்பவர் "சிலோன் ஏ டிவைடட் நேசன்" என்ற நூலை எழுதினார். காலங்காலமாகச் சிங்கள, தமிழ் இனங்களுக்கிடையே நிலவிய முரண்பாட்டை அவர் தனது ஆய்விலே விளக்கினார். இந்நூலுக்கு முன்னுரையை எழுதிய சோல்பரி பிரபு தானும், தனது ஆணைக்குழுவும் முன்னிறுத்திய தவறினை உளப்படி உணர்ந்து வருந்தித் தெரிவித்தார். ஆனால், அது காலங்கடந்த வருத்தமாகவே அமைந்தது.

பீ.எச். பாமர் நூலின் முடிவுரையாகக் கூறுகிறார். "உண்மையில் இலங்கை ஒரு பிரிவுபட்ட நாடே. அது எப்போதும் அப்படித்தான் இருந்தது. சுதந்திரத்தின் போது கொண்டுவரப்பட்டதும், உலகின் ஏனைய பகுதிகளில் உள்ள அரசியல் ஆய்வாளர்களால் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டதுமான "தேசிய ஒருமைப்பாடு" என்பது. நிலையைச் சரிவர அறியாமையினாலும் மயக்கத்தினாலும் சொல்லப் பட்டதே ஆகும்." பண்டாரநாயக்காவின் அவலச்சாவின் பின்னர், சிங்கள மேலாண்மைப் போக்கு சிங்களத் தலைமையை



**கணவன் வழியில் அடக்குமுறையைத் தொடர்ந்த சிறீமாவோ பண்டாரநாயக்கா.**

தமிழரை அழிக்கும் திட்டத்திற்குக் கூட்டமைக்கத் தூண்டின. ஏற்கெனவே இனவாதம் கக்குவதனால் மட்டுமே ஆட்சிக் கட்டிலைத் தக்கவைக்க முடியுமென்ற படிப்பினையைப் பெற்றுக் கொண்ட ஐ.தே.கட்சி காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள முனைந்தது.



அஞ்சல் சட்டத்தை மீறி தந்தை செல்வா அவர்களால் வெளியிடப்பட்ட அஞ்சல் தலை.

தனது கணவரான எஸ்.டபிள்யூ. ஆர்.டி. பண்டாரநாயக்கா தமிழர்களுக்கு வழங்க முனைந்த உரிமைகளைத் தான் வழங்குவேனென வாக்குறுதி வழங்கி, தமிழரசுக் கட்சியின் உதவியைப்பெற்று அன்றைய ஐ.தே.க. அரசைக் கவிழ்த்து, மூன்று மாதங்களுக்குள் மறு தேர்தலின் மூலம் (1960 யூலையில்) உலகின் முதல் பெண்பிரதமராக வரும் வாய்ப்பைப்பெற்ற சிறீமாவோ பண்டாரநாயக்கா, பின்னர் தனது கணவரை விட மிகுந்த மூர்க்கத்துடன் தமிழர்களை அடக்க முற்பட்டார். சிங்களம் மட்டும் சட்டத்தைப் மிகுந்த விரைவோடு செயற்படுத்த முனைந்தார். இலங்கை முழுவதுமுள்ள அனைத்து அரசுத்திணைக்களங்களிலும் சிங்களத்தை ஆளுகை மொழியாக்குவதில் தனது முழுஆற்றலையும் ஒருசேரக் குவித்துச் செயலாற்றினார். தமிழர்களின் மரபுவழித் தாயக நிலமான வடக்கு, கிழக்கு மாகாணங்களில் அமைந்த நீதி மன்றங்களிலும் கூட, தனது சிங்கள மொழிக் கொள்கையை மூர்க்கமாக நடைமுறைப்படுத்தினார். இந்த இழிவு நிலையிலிருந்து மீள, தமிழ் பேசும் மக்கள



1961 அறப்போர் ஆயுத முனையில் அடக்க முயற்சிக்கப்படுகிறது

சா ஜே வே செலவநாயகம் அவாகளின தலைமையில் சட்ட மறுப்பு ஒத்துழையாமை இயக்கத்தை நடதததொடங்கினர். 1961 பெப்ரவரி 20முதல் ஏபபிரல 13வரை. வெற்றிகரமாக நிகழநத சததியாக்கிரகம். ஏப்பிரல 14முதல 17வரை நடந்த. அஞசல சட்ட மறுப்பு போன்ற எதிர்ப்பு இயககஙகளை இராணுவ வல்லாண்மை கொணடு ஒடுககமுறபட்ட சிறிமாவோ பணடாரநாயககா மீணடும். நெருககடிகாலச் சட்டததைநடைமுறைப்படுத்தினார். இதனை அடுத்து. சிஙகளஇராணுவமும தமிழப் பகுதியில் முதனமுதலாகக் காலூன்றியது. தமிழத் தலைவாகள் சிறையிலிடபபடடனா தமிழரசுககட்சி தடை செய்யப்பட்டது. சுதநதிரன பத்திரிகை தடை செய்யப்பட்டது மககளின கொதிபபுணாவு இராணுவததின சபபாததின்கீழ் நசுககபபட்டது சிறிமாவோ நடைமுறைபபடுததிய இநத இராணுவத் தீர்வைததான இனறுவரையுள்ள பேரினவாத அரசுத தலைமைகள் தமது நியாய பூர்வமான உரிமைக்காகப போராடும் தமிழாகள மீது சுமதத நினைக்கின்றன. இததகைய கொடிய ஒடுககமுறைதான சிஙகள பௌதத வெறியினைக் கூர்மைபபடுததி வாககு வஙகியைக் கொழுககவைககும எனபதை இனறுவரை எலலாச சிங்கள அரசியல் தலைவாகளும் நம்புகினறனா. நடைமுறைப்படுததுகினறனா

## தமிழர்களை ஏமாற்றிய நான்காவது உடன்படிக்கை 1965

1965 இல் ஐ.தேக. டட்லி சேனநாயக்காவின் தலைமையிலே பெரும்பான்மையின்றி ஆடசியை அமைததது. அநத ஆடசிககுத் தமிழரசுக்கட்சி கைகொடுத்து தவிப வரலாறறுத தவறும இககாலகடடததிலேதான் நிகழ்ந்தது. தமிழரசுக கட்சியின தகதம டட்லி சேனநாயககாவுக்குமிடையே நிகழநத ஓர் உடன்படிககையின அடிப்படையிலேதான இநத ஆதரவு ஐதேகட்சிகக வழங்கபபட்டது.

தமிழ மககளை நானகாவது முறையாக. சிஙகளத் தலைமை ஏமாறறியதறகுச் சானறாகவும மாறிமாறி ஆடசிககு வநத சிங்களத் தலைமைகள் தமிழாகளுககு வாககுறுதிகளைக் காட்டி. அவாகளின் முதுகிலே குததியதறகுச் சான்றாகவும. தமிழாகளின அரசியறறலைமை தெரிநதும் ஏமாநது வநத துன்பநிலைககுச் சான்றாகவும் டட்லி-செல்வா உடன்படிக்கை அமைநதது.



டட்லி செல்வா உடன் படிக்கையில் ஏற்றுக் கொள்ளப்பட்டவை

1. தமிழ்மொழி விசேடவிதிகள் சட்டத்தின் மூலம், வடக்கு கிழக்கு மாகாணங்களின் ஆளுகை மொழியாகத் தமிழை ஆக்க உடன் நடவடிக்கை எடுக்கப்படும்.
2. வடக்கு கிழக்கு மாகாண நீதிமன்றங்களின் மொழியாகவும், பதிவேடுகள் பேணப்படும் மொழியாகவும் தமிழ் ஆக்கப்படும.
3. இலங்கையிலே மாவட்ட சபைகள் ஆக்கப்படும்.
4. காணி விரிவாக்கச் சட்டத்தில் திருத்தம் கொண்டுவரப்படும். இதன்படி, வடக்குகிழக்கு மாகாணங்களின் குடியேற்றம் தொடர்பாக முன்னுரிமை தமிழர்களுக்கு வழங்கப்படும் காணிகள் பிரித்துக் கொடுக்கப்படும்போது அந்த மாவட்டத்தைச் சேர்ந்தகாணி பற்ற தமிழர்களுக்கு முதலுரிமையும வட கிழக்கு மாகாணங்களைச் சேர்ந்த தமிழர்களுக்கு இரண்டாவது முன்னுரிமையும் இலங்கையிலுள்ள ஏனைய மக்களுக்கு மூன்றாவது முன்னுரிமையும் வழங்கப்படும். இந்த உடன்படிக்கை 24.03.1965 இல் கைச்சாத்தானது. டட்லி சேனநாயக்கா தனது உடன் படிக்கையில் ஒரு பிரிவாக தமிழ்மொழி விசேட விதிகள சட்டத்தை 08.01.1966 இல, பாராளுமன்றத்தில் நிறைவேற்றினார்.

## மீண்டும் கிளர்ந்தெழுந்த சிங்களப் பேரினவாதப்பூதம்

தமிழர்களின் அவாவினைச்சற்றும் தீர்க்காத வரையறுக்கப்பட்ட மொழி உரிமையே இதில் அடங்கியிருந்தது. ஆனாலும், சற்றுத் தளர்ந்திருந்த சிங்களப் பேரினவெறிப் பூதம் மீண்டும வெளியே கிளம்பியது. சிறிமாவோ பண்டாரநாயக்காவும் அவரது படைபட்டாளத்தினரும் பெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களை நிகழ்த்தினர் இனவெறிபிடித்த பிக்குகள் கிளர்ந்து தெருக்களில் இறங்கினர். "தோசை, தலத்தெல் (நல்லெண்ணை) மசாலவடை என்னும் வெறிக் கூச்சல் கிளம்பியது. இரத்தின சாரதேரோ என்ற இனவெறிப் பிக்கு பொலிசாரால் சுடப்பட்டுச் சாவடைய, அவன் தேசிய வீரனாக உருமாற்றப்பெற்றான இனவாதத் தாக்குதல் முனைப்புப் பெறத் தொடங்கியது. சிறுபான்மையோருக்கு வழங்கும் சிறு



இனவெறிப் பிக்கு இரத்தினசார தேரோவுக்கு சிங்கள இனவெறிக் கூட்டம் அமைத்த நினைவுத்தூண்.

சலுகைகளைக் கூட, தாங்கிக் கொள்ளக்கூடிய தார்மீக உணர்வு காலங்காலமாக இன முரண்பாட்டு நச்சுணர்வினை வளர்த்துக் கொண்ட சிங்கள பௌத்த வெறியர்களுக்கு இல்லாமற் போனமை ஒருசிறிதும் வியப்பானதல்ல. இதனாலேதான் ஐதேகட்சி கொடுக்க முனைந்த சலுகைகளை சிறிலங்கா





பீற்றர் கெனமன் — என்.எம்.பெரேரா — கொல்வின் ஆர்.டி.சில்வா

சுதந்திரக்கட்சியும், சிறிலங்கா சுதந்திரக் கட்சி கொடுக்க முனைந்ததை ஐ.தே.கட்சியும் மாறிமாறி எதிர்த்தன. ஒவ்வொரு எதிர்ப்பின் போதும் இனவன்முறைகளைத் தூண்டித் தமிழ் மக்களின் நிலத்தை, உயிரை, உடைமைகளை விழுங்கித் தமது ஆதிபரப்பையும், ஆசைப்பரப்பையும் அகலமாக்கிக் கொண்டன. 1964இல் பேராசிரியர் செ.சுந்தரலிங்கத்துக்கு எழுதிய இருகடிதங்களில் இம் முரண்பாட்டின் வடிவத்தை உள்ளபடி தான் உணர்வதாகச் சோல்பரிப் பிரபு மனந்திறந்து எழுதியுள்ளார். "இலங்கையில் ஆளுநராக நான் இருந்த காலத்தில் சிங்கள தமிழ் இனங்களுக்கிடையே இத்தனைதூரம் கசப்பான முரண்பாடு இருக்கிறதென்பதை நான் எதிர்பார்க்கவில்லை. சேர்.ஜோன் கொத்தலாவலை தமிழர்களைச் சாட்டையால் அடித்தாரென்றால், மறைந்த எஸ்.டபிள்யூ.ஆர்.டி பண்டாரநாயக்கா, அவர்கள் கொடுந்தேளாகக் கொட்டுகிறார். தமிழர் மீதான சிங்களவரின் நடைமுறை தொலைநோக்கற்றதென்பதோடு மூடத்தனமானதுமாகும். நான் பரிந்துரை செய்த அரசியற்றிட்டத்தின் 29ஆவது பிரிவு சிறுபான்மையினரின் நலன்காக்கப் போதுமானதென நான் நினைத்திருந்தேன். ஆனால், "மனித உரிமை" பற்றிய பவிதியையும் பரிந்துரை செய்திருக்க வேண்டுமென்று இப்போது உணர்கின்றேன்." மனித உரிமையானது சிங்கள ஆட்சியினாலும் அதை ஆசீர்வதிக்கவோ, அவதிக்குள்ளாக்கவோ வல்லமை பெற்ற புத்த மடங்களாலும் கேவலமாக மீறப்படுவதைக் கண்கூடாய் உணர்ந்த பின்னரே சோல்பரி இப்படி எழுதினார்.

## இனவாதத்துக்கு சிங்கள இனம் வழங்கிய பெரும்பான்மை வலு

தமிழர்களுக்கெதிரான இனவாதத்தைப் பெருமளவிற் கக்கி, 1970 ஆம் ஆண்டிலே மீண்டும் ஆட்சிக்கு வந்த சிறீமாவோ பண்டாரநாயக்கா, ஒரு காலத்தில் சிறுபான்மையோருக்காக ஓரளவிலேனும் குரல் கொடுத்த இடதுசாரிச் சிங்களத் தலைவர்களான கொல்வின் ஆர்.டி.சில்வா, டாக்டர் என்.எம்.பெரேரா, பீற்றர் கெனமன் போன்றோர் ஓரணியில் கைகோத்துக்கொண்டனர். லங்கா சமசமாசக்கட்சியினர் 1964இலேயே சிறீமாவோ அரசுடன் இணைந்தனர். சுதந்திரத்துக்குப் பின்னரான தேர்தலில் முதன் முதலாக சிறீமாவோவின் பொதுசன ஐக்கிய முன்னணி நாடாளுமன்ற மொத்த உறுப்பினர் தொகையான 151இல் 116ஐ வெற்றிகொண்டு 2/3 பெரும்பான்மைக்குரியதாயிற்று. இதில் சிறீமாவோ பண்டாரநாயக்காவின் சிறிலங்கா சுதந்திரக்கட்சி மட்டும் 91 இடங்களை வென்றது. 65 உறுப்பினர்களைக் கொண்டிருந்த ஐ.தே.க 17 ஆகத் தேய்ந்தது. இரண்டு முக்கிய கட்சிகளுமே இனவாத அரசியலை மேற்கொண்டிருந்தாலும் எந்தக்கட்சி ஆகக்கூடிய அளவு தமிழர்களின் இருப்பை அழிப்பதாக வாக்குறுதி அளிக்கின்றதோ அந்தக் கட்சியே தேர்தலில் வெற்றி பெறுவதென்பது இலங்கைத் தேர்தல்களின் தலையெழுத்தாக அன்றிலிருந்து இன்று வரை இருந்து வருகின்றது. அதனாற்றான் இந்த இரண்டு கட்சிகளும் மாறி மாறி ஆட்சிக்கு வரக்கூடிய நிலை இருந்தது. பிரித்தானிய முடியின் கீழான சுதந்திரத்தையே இலங்கை அதுவரை அனுபவித்து வந்தது. சோல்பரி யாப்பின் 29 ஆவது பிரிவு சிங்களவரின் இனமத ஆதிக்கத்தை ஏற்படுத்துவதற்கு இடைஞ்சலாக இருப்பதனால், அதனை 2/3 பெரும்பான்மையைக்கொண்டு மாற்றியமைத்து இலங்கையைச் சிங்களப் பௌத்த குடியரசாக்கும் சிங்கள இன வெறியர்களின் நீண்டகாலக் கனவை நிறைவேற்றும் வகையிலே சிறீமாவோ பண்டாரநாயக்கா செயற்பட்டார். இடதுசாரிகளும் அதற்குத்துணை போயினர். செல்லையா குமாரசூரியர், சி.அருளம்பலம், ஆ.தியாகராசா, எம்.சி சுப்பிரமணியம், இராசன் செல்வநாயகம், சி.எக்ஸ் மார்டின், ஆகிய "ஆறு" தமிழ்ப்பாராளுமன்ற உறுப்பினர்களும் அரசின் தமிழ்ஒழிப்பு முயற்சிக்குத் துணையாகப் போயினர்.


இராஜன் செல்வநாயகம்


ஆ.தியாகராசா


சி.எக்ஸ். மார்டின்


எம்.சி.சுப்பிரமணியம்




செல்லையாகுமார சூரியர்

இடதுசாரித் தலைவராக இருந்து ஒரு காலத்தில் "ஒரு மொழி யென்றால் இரண்டு நாடுகள் இரண்டு மொழியென்றால் ஒருநாடு" என்று பேசி சிங்களச்சட்டத்தை எதிர்த்த கொல்வின் ஆர்.டி.சில்வா குடியரசு யாப்பின் சிற்பியாகினார். சிங்கள இனத்திற்குள்ளே மெலிதாக முளைவிடத் தொடங்கிய இன, மத சகிப்புத் தன்மையைக்கூடச் சிங்கள இனவாதம் ஏற்றுக்கொள்வதாக இல்லை. நிலமின்மை, போன்றவற்றால் விரக்தியுற்ற சிங்கள இளைஞர்கள் மார்க்சிய சிந்தனையால் கவரப்பட்டு 1971இல் ஜே.வி.பி என்ற அமைப்புக் கூடாக வெளிவந்து றோகனவிஜயவீர தலைமையில் கிளர்ச்சிசெய்தபோது அவர்களின் புரட்சி இராணுவ வன்கரத்தாற் கொடூரமாக நசுக்கி அழிக்கப்பட்டது.


றோகனவிஜயவீர

10,000இற்கு மேற்பட்ட சிங்கள இளைஞர்கள் கொல்லப்பட்டனர். 15,000இற்கும் மேற்பட்டோர் சிறைப்பிடிக்கப்பட்டனர். அல்லது சரண் அடைந்தனர். சொந்த இனத்தவரேயாயினும் சிங்கள பௌத்த மேல்மட்ட நலன்களுக்கு மாறாகக் கிளர்ந்தெழுந்த போது இரும்புக் கரங்கொண்டு நசுக்கிய சிறீமாவின் அரசு தமிழர்களைப் பற்றிச் சிந்தித்து அவர்களுக்கு நீதி வழங்குமென எதிர்பார்ப்பதில் எவ்வித பொருளுமில்லை.

## தமிழினத்தை அடிமைகளாக்கிய முதலாவது குடியரசு யாப்பு

புதிய குடியரசு பற்றிய வரைவுக்காக ஒரு அரசியல் நிர்ணைய சபையை 1970 யூலையில் சிறீமாவோ கூட்ட, அது 1972 மேயில் புதிய சட்ட வரைவினை முடித்தது. தொடக்கத்தில் தமிழ்த் தலைவர்கள் இந்தச் சட்டவரைவுச் சபையிற் பங்குபற்றியபோதும் அவர்களால் முன்வைக்கப்பட்ட தமிழர் நலன்பற்றிய எந்தவொரு முன்மொழிவும் அங்கு ஏற்கப்படவில்லை.

இணைப்பாட்சி அமைப்போடு கூடிய தன்னாட்சி உரிமையுள்ள 5 பிராந்தியங்களும் தமிழுக்குத் தேசிய மொழித்தகுதியும் இந்தியத்தமிழர் பற்றிய முன்னேற்றகரமான விதிமுறையும் சட்ட வரைவிற் சேர்க்கப்பட வேண்டுமென முன்மொழிந்து அவை கேட்கப்படாது புறந்தள்ளப்பட்ட நிலையில், தமிழ் உறுப்பினர்கள் 19பேரில் 15பேர் சபையைவிட்டு வெளியேறினர்.

இலங்கை நாடாளுமன்றத்தில் 1972 ஆம் ஆண்டு மே மாதம் 22 ஆம் நாள் புதிய குடியரசு யாப்பு தமிழர் விருப்புக்கு மாறாக அரங்கேறியது. ஏற்கெனவே தமது உரிமைகள் பலவற்றை இழந்துவிட்டிருந்த தமிழ் இனம் முற்றாகப் புறந்தள்ளப்பட்டு, இரண்டாம்நிலையானதுதான் என அரசியற் சட்டத்தின் மூலம் உறுதியாக்கப்பட்டது.

குடியரசு யாப்பின நடைமுறைநாள் அறிவிக்கப்படும் பொழுதே பௌத்தத்தின் முதன்மை "Tenth day of the waxing moon of vesak in the year 2515" எனவே சொல்லப்பட்டது. 2515 என்பது புத்த ஆண்டையும் மாதம் சிங்களப் பௌத்த மக்களின் வெசாக் கொண்டாட்டத்தையும் குறித்து நிற்பதோடன்றே ஆட்சியாளரின் குறுகிய நோக்கைக் குறித்து நிற்கின்றது. இந்த யாப்பின் மூலம் இலங்கைக்கு மிகப் பிற்பட்ட காலத்திலேயே வந்தடைந்த பௌத்தம் முதன்மை இடத்தைப் பிடித்துக்கொண்டது. நீண்ட காலமாகப் பௌத்தபீடங்கள் கண்ட கனவு, யாப்பின் இரண்டாவது இயல் 6 ஆம பிரிவினால் நனவாகியது. சிறிலங்கா குடியரசின் முதன்மைக்கும் சீராட்டுதலுக்கும் உரியதாகப் பௌத்த மதம் யாப்பிலே தன்னை நிலைநிறுத்திக் கொண்டது. பிரிவு 7 இன்படி சிறிலங்காவின் ஆளுகை மொழியாகச் சிங்களம் யாப்பிலே உறுதியுரைக்கப்பட்டது. எஸ்.டபிள்யூ. ஆர்.டி.பண்டாரநாயக்காவினால் கொண்டு வரப்பட்டு எவ்வகையிலும் நடைமுறைக்கு வராத தமிழ் மொழி (விசேடவிதிகள) சட்டத்தின்படியே, தமிழ் மொழியின் பயன்பாடு இருக்கும் எனக்கூறியது யாப்பு. சிங்களவெறி அத்துடன் அமைதி கொள்ளவில்லை. **தமிழ் மொழி (விசேடவிதிகள்) சட்டத்திற் கூறப்பட்ட எந்த வொரு விதியும் குடியரசு யாப்பின் விதியெனக் கொள்ளப்படத்தகாதது என்றும், குடியரசு யாப்பு விதியிலும் குறைந்த தகுதி உடையதாகவே இருக்கும் என்றும் புதிய யாப்பு தமிழ் மொழியின் மீது இனவாத ஆப்பினை இறுக்கியது.** தமிழர்களைப் பொறுத்தவரை அவர்களது கரிநாளாக, குடியரசுச்சட்டம் நிறைவேற்றப்பட்ட நாள் (22.05.1972) அமைந்தது. தமிழர் சிங்களவர் ஆகிய இரண்டு இனத்தவர்களும் ஒன்றிணைந்து இலங்கைக்குள் இனிமேல் தத்தமது இன, மொழி நலன்களைப் பேணியவாறு இருக்க முடியாதென்ற எண்ணத்தைத் தமிழர்களிடையே ஆணி அறைந்ததுபோல அறிவித்தது இந்த முதலாவது குடியரசு யாப்புத்தான்.

தமிழீழம் பெறுவது காலத்தின் தேவை என்பதைத் தமிழ்த் தலைவர்கள் உணரத் தொடங்கினர். வரலாற்றுப் பெருமையும், தன்னாட்சி உரிமையும் இருந்தபோதும், சிங்களவரோடு ஒன்று சேர்ந்து வாழலாம் என்ற எண்ணத்தில் பல்வேறு ஏமாற்றங்களையும் இழிவுகளையும் எதிர்கொண்ட தமிழ்த் தலைவர்களுக்கு, சிங்களம் கொடுத்த மரண அடியாக இந்தக் குடியரசுயாப்பு அமைந்தது.

தமிழ் அரசுக் கட்சித் தலைவர் சா.ஜே.வே.செல்வநாயகம் அவர்கள் 1958 கலவரங்களின் போதே, "தமிழர்கள் தனிநாட்டுக் கோரிக்கைக்குத்தள்ளப் படுகின்றார்கள்" என்று கூறினார். தமிழ் மக்கள் இந்தக் குடியரசு அரசியல்




யாப்பை ஏற்கவில்லை என்பதை அவர் இடைத் தேர்தலின் ஊடாகநிறுவ முனைந்து, நாடாளுமன்றத்தில் தனது உறுப்புரிமையைத் துறந்தார். இடைத் தேர்தலை நடாத்தாது தாமதித்து நீண்டகாலம் தள்ளிவைத்த சிங்கள அரசு, தனது ஆட்சிப்பொறியை முழுமையாக முடுக்கிவிட்டு, தனக்கு வாய்ப்பான சூழலை ஏற்படுத்தி அதன் பின் தேர்தலை நடாத்தியது.

## குடியரசை நிராகரித்த காங்கேசன்துறை இடைத்தேர்தல்

தமிழர்களுக்கு ஒரு தனியரசு என்ற கோரிக்கையின் பேரில் 1975 பெப்ரவரி இடைத்தேர்தலில் திரு.சா.ஜே.வே. செல்வநாயகம் அவர்கள் பெரு வெற்றியைக் கண்டார். முன்னைய தேர்தலில் பெற்ற வாக்கிலும் 12,000 கூடுதலான வாக்கோடு அவர் வெற்றியடைந்ததானது, சிறிலங்காவின் குடியரசு அரசியல் அமைப்பை முற்றாகப் புறந்தள்ளி, தனித்தமிழீழம் என்ற கோரிக்கைக்குத் தமிழ்மக்கள் கொடுத்த ஒப்புதலாகவும் அமைந்தது. இலங்கை அரசின் சார்பில் அந்த இடைத்தேர்தலில் நின்று தோல்வியுற்ற இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர் திரு.வ.பொன்னம்பலம் பிற்காலத்தில், மனச்சாட்சியின் உந்துதலால் தனது வாக்கினை "சா.ஜே.வே. செல்வநாயகத்துக்கே அளித்தேன்" என்று மனந்திறந்து ஒப்புக்கொண்டார். தமிழினத்துக்கு ஏற்பட்ட மிக நெருக்கடியான காலகட்டத்தில் தமிழர் தலைவர்கள் ஒற்றுமைப்பட்டு காணவேண்டிய நெருக்கடியில் தமிழரசுக்கட்சி, தமிழ்க்காங்கிரஸ், இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ், ஈழத்தமிழர் ஒற்றுமை முன்னணி ஆகிய கட்சிகள் ஒன்று சேர்ந்து தமிழர் கூட்டணி என்ற பெயரில் ஈழத்தமிழர் ஐக்கிய முன்னணியை அமைத்தனர்.[9]


தந்தைக்கு மாபெரும் வெற்றி!

புதிய அரசியல் சட்டத்தை தமிழ் மக்கள் நிராகரித்தனர்!

16,470

காங்கேசன்துறை இடைத்தேர்தல் முடிவுபற்றிய பத்திரிகைச் செய்தி.

இதுவே பிறகு 1976 மே மாதம் 14 ஆம் நாள் வட்டுக்கோட்டை மாநாட்டின் போது "தமிழர் விடுதலைக் கூட்டணி" என்று பெயர் மாற்றிக் கொண்டதுடன் தமிழீழம் அமைப்பதே தமது இலக்கு எனவும் அறிவித்தது. தமிழ் மக்கள் ஒரேமுகமாக தமிழர் விடுதலைக் கூட்டணியின் பின்னே திரண்டனர். கடந்த காலங்களில் சிங்களத் தலைவர்களினால் ஏற்பட்ட மாற்றங்கள் தமிழர்களை அனைவரையும் ஒன்றுபட வைத்தது. குறிப்பாக 1970 இற்குப்பின், சிறிமாவோ தலைமையிலான அரசு தமிழர் கல்வி மீதும், கலைபண்பாட்டின் மீதும் நிகழ்த்திய குறிவைத்த தாக்குதல் அதற்குப் பெருங்காரணமாய் அமைந்தது.

### தமிழிளைஞர்களைக் கிளர்ந்தெழவைத்த தரப்படுத்தல்

தமிழ மாணவர்கள் சிறுபான்மையினராக இருந்த போதும் வளக்குறைவான நிலையிலும் ஆர்வத்தோடும் அக்கறையோடும் கல்வி பயின்று வந்ததால பல்கலைக்கழக அனுமதியில, குறிப்பாக பொறியியற்றுறை அனுமதியில், இனவிகிதாசாரத்துக்கு மேற்பட்ட இடங்களைப் பெற்று வந்தனர். திறமை அடிப்படையில் தமிழ் மாணவர்களின் நுண்ணறிவுடன் போட்டியிட முடியாத சிங்கள மேன்மட்டத்திலிருந்தும் பௌத்தமட்டங்களிலிருந்தும் சிங்கள மாணவர்களை

மேலே தூக்கிவிட வேண்டும் என்ற அழுத்தம் சிங்கள அரசுக்கு ஏற்படுத்தப்பட்டது. ஏதாவது ஒரு முறையில் தமிழ் மாணவர்கள் உயர்கல்வி அனுமதியைக் குறைத்தால் அடுத்த தேர்தலிலும் தனது வெற்றி வாய்ப்பைப் உறுதிப்படுத்தி கொள்ளலாமென்ற வஞ்சக எண்ணம் சிறீமாவோவுக்கு இருந்தது. இதைத் தொடர்ந்து அரசாங்கம் தீட்டிய திட்டத்தின் வெளிப்பாடுதான் தமிழ் மாணவர்களின் சீற்றத்தைக் கிளறி அவர்களை அரசியல் அரங்கத்தில் நுழையவைத்த "தரப்படுத்தல்" என்ற கொடிய திட்டமாகும். 1970 இல் கொண்டுவரப்பட்ட இத்திட்டம் பலகலைக்கழக அனுமதியில் ஒரே காலத்தில் படித்து, ஒரே தேர்வை ஒரு நாளில் எழுதினாலும் தமிழ் மாணவர்கள் சிங்களவரை விடக் கூடுதல் மதிப்பெண்களைப் பெறவேண்டிய ஒரு கட்டாயத்தை ஏற்படுத்தியது.

| 1970 தரப்படுத்தலின் விளைவு | | | [illegible] | [illegible] |
|---|---|---|---|---|
| பொறியியல் | பேராதனை | சிங்களவர் | 86 | [illegible] |
| | | தமிழர் | 60 | [illegible] |
| | கட்டுபெத்தை | சிங்களவர் | 60 | [illegible] |
| | | தமிழர் | 33 | 212 |
| மருத்துவம் | பேராதனையும் கொழும்பும் | சிங்களவர் | 137 | 229 |
| | | தமிழர் | 103 | 250 |
| பல் மருத்துவம் | " " | சிங்களவர் | 17 | |
| | | தமிழர் | 24 | |
| வேளாண்மை | பேராதனை | சிங்களவர் | 25 | |
| | | தமிழர் | 17 | |
| கால்நடை மருத்துவம் | " " | சிங்களவர் | 15 | |
| | | தமிழர் | 3 | |
| உயிரியல் விஞ்ஞானம் | [illegible] நான்கு இடங்களிலும் | சிங்களவர் | 111 | 175 |
| | | தமிழர் | 41 | 181 |
| பௌதிகவியல் | விஞ்ஞானம் | சிங்களவர் | [illegible] | 183 |
| | | தமிழர் | 92 | 204 |
| கட்டிடக்கலை | | சிங்களவர் | 16 | 180 |
| | | தமிழர் | 28 | 194 |

பல்கலைக்கழக அனுமதி பெற்ற தமிழ் மாணவர்கள்

1969- 1975

| | 1969-70 | 1970/71 | 1971/72 | 1973 | 1974 | 1975 |
|---|---|---|---|---|---|---|
| விஞ்ஞான அடிப்படையிலான கற்கை | 27.6 | 28.6 | 31.2 | 25.9 | 20.9 | 19.5 |
| பொறியியல் | 48.3 | 40.8 | 24.7 | 16.6 | 16.3 | 14.2 |
| மருத்துவம் | 48.9 | 40.9 | 30.3 | 28.9 | 23.9 | 17.4 |
| கலை (சட்டம் உட்பட) | 7.3 | 7.6 | 6.8 | 6.1 | 10.0 | 10.0 |

[illegible] 80% [illegible] 20% [illegible]



## கல்வி அமைச்சர் பதியுதீன் மொகமட்

இதனால், தமிழ் மாணவரின் பல்கலைக்கழக அனுமதி திடீரென வெகுவாகக் குறைந்தது. இந்தத்திட்டத்திற்கு, பல்கலைக்கழக கல்விமாளர்களிடம் இருந்து கூட எதிர்ப்புக் கிளம்பியதால் 1973 இல், இன்னும் மெருகுபடுத்தப்பட்ட தரப்படுத்தற்றிட்டத்தை, சிறீமாவோ அறிமுகப்படுத்தினார். மாணவர் தோற்றும் மொழியினைக் கொண்டு பல்கலைக்கழக அனுமதி தரப்படுத்தல் செய்யப்பட்டது 1974இல், தரப்படுத்தல் புள்ளிகளிலான தேர்வு முறைக்குப் பதிலாக மாவட்ட மட்டத்தில் அனுமதிப் பங்கு என்ற மாற்றம் கொண்டு வரப்பட்டது இதைத் தொடர்ந்து 1974,1975களில் விஞ்ஞானத்துறையிலான பல்கலைக்கழக அனுமதிகளில் தமிழ் மாணவர்களின் தொகை, அவர்தம் இன விகிதாசாரத்தைவிட

## தமிழ் மாணவர் பேரவை உறுப்பினர் சிலர்






சத்தியசீலன் சிவகுமாரன் தங்கத்துரை நடேசதாசன்






பிரபாகரன் அமரசிங்கம் திசைவீரசிங்கம், சபாலிங்கம்

மிகவும் கீழே விழ, சிங்கள மாணவர் தொகை பெரும் எழுச்சி கண்டது இருந்தும் இந்த முறைக்கு, கொழும்புப் பள்ளிகளிலிருந்தே எதிர்ப்புக் கிளம்பியது. தமிழர்களின் எதிர்ப்புக்குக் காது கொடாத சிங்கள அரசு, கொழும்பு சிந்தவுடன் வேறொரு மாற்றத்தைக் கொண்டுவந்தது.70% அனுமதி திறமை அடிப்படையிலும் 30% மாவட்டப் பங்கு ரீதியிலும் அமையும் என்ற திருத்தம் வந்தது இந்த 30%இலும் அரைப்பங்கு பின் தங்கிய மாவட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டது. திட்டமிட்ட இக்கல்வி ஒதுக்கல் திட்டத்தில் தமிழ் மாணவர்களின் எதிர்காலம் இருளத் தொடங்கியதால் ஒன்று சேர்ந்த அவர்கள் 1970 இல், மாணவர் பேரவை என்ற தமது அமைப்பின் மூலம் எதிர்ப்பை வெளிப்படுத்தத் தொடங்கினர். இதுதான் பிறகாலத்தில் சிங்கள அரசுகளின் கொடிய அழுத்தங்களினால் ஆயுதம்தாங்கிய இளைஞர்கள் தமிழர் இனத்திற்குள் இருந்து வெளிவருவதற்கு முதன்மைக் காரணிகளில் ஒன்றாகியது.

### பேரினவாதத்துக்கெதிராகக் கிளர்ந்தெழுந்த தமிழ் மாணவர் பேரவை

சத்தியசீலன், சபாலிங்கம், முத்துக்குமாரசாமி, பெரியசோதி, சிவகுமார், பிரபாகரன், தங்கத்துரை, நடேசதாசன், அமரசிங்கம, திசைவீரசிங்கம் போன்றோர் மிகவும் ஆர்வத்தோடு இம்மாணவர் பேரவையில் உறுப்பினராய் செயற்பட்டவர்களில குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களில் சத்தியசீலன் 1973பெப்ரவரி 23 இல், சிறிலங்கா

காவற்றுறையிடம் பிடிபட்டார். சிவகுமாரன் 1974 யூன்05இல், கோப்பாயில் இலங்கை அரச படையால் சுற்றிவளைக்கப்பட்டபோது நஞ்சுண்டு தற்கொலைச் சாவடைந்தார். தங்கத்துரை, நடேசதாசன் வெலிக்கடையில் கொல்லப்பட்டனர். **மாணவர் பேரவையென இயங்கியவர்களில் முதன்மையானவர்களிற் பலர் பின்னர் ஒதுங்கிவிட, பிரபாகரன் மட்டுமே தமிழீழ விடுதலைப்புலிகளின் தலைவராக தமிழீழ மீட்புப் போரில் தொடர்ந்தும் ஈடுபட்டு, இன்றும் அதை முன்னெடுத்து வருகின்றார்.** தமிழ் மக்களின மொழி, மத, கல்வி உரிமைகளிற் கைவைத்த அன்றைய சிறிமாவோ அரசு தமிழ் மக்களின் பண்பாட்டுச் சுதந்திரத்தைக்கூட அனுமதிக்கவில்லை.

### *சிங்களப்படை தமிழாராய்ச்சி மாநாட்டில் நடத்திய படுகொலை*

1974ஆம் ஆண்டு சனவரியில், இன இரண்டகர்களினதும் அரசினதும் பல்வேறு முட்டுக்கட்டைகளுக்கு இடையேயும் பேரெழுச்சியோடு யாழ்ப்பாணத்தில் 4 ஆவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு எட்டுநாட்கள் நடைபெற்றது. (3-10 சனவரி 1974) இறுதி நாளான 10.01.1974 அன்று, யாழ் வீரசிங்கம் மண்டபத்தில் திருச்சி ஜமால் முகமது கல்லூரியின் பேராசிரியர் நைனா முகமது அவர்களின் இலக்கியப் பேச்சை திரண்டிருந்த மக்கள் செவிமடுத்துக் கொண்டிருந்தபோது, திடீரென ட்ரக் வாகனங்களில் வந்த சிங்களக் காவற்றுறையினர் மக்களைக் காரணமின்றித் தாக்கத் தொடங்கினர்; கண்ணீர்ப்புகைக் குண்டுகளை ஏவினர்; மின்சாரக்கம்பிகளை அறுத்து வீழ்த்தினர். மின்னொழுக்கினால் ஏழு தமிழ் மக்கள் கருகிமடிந்தனர். மேலும் இருவர் கூட்டத்தில் நசுங்கிச் செத்தனர். தொடர்ந்து நான்கு நாட்களாக யாழ்ப்பாணத் தெருக்களில் கட்டவிழ்த்து விடப்பட்டுத் திரிந்த சிங்களக் காவற்றுறையினர் தமிழ் மக்களைக் காரணமின்றித் தாக்கி, தமிழர்களின்





யாழ் தமிழாராய்ச்சி மாநாட்டுப் படுகொலை

தாயகத் தலைநகரிலேயே தமிழர்களுக்குப் பாதுகாப்பு இல்லை என்ற நிலையைத் தோற்றுவித்தனர்.

சிங்கள பௌத்த இனவெறியின் இந்த வீச் செல்லை யாழ்ப்பாணம் வரை நீண்டு வருவதற்கு சிறீமாவோ அரசின் அரசியல் அதிகாரிகளாக எல்லாவகையான சலுகைகளையும் அனுபவித்து வந்த யாழ்மேயர் அல்பிரட் துரையப்பா போன்ற சில தமிழர்களும் காரணமாக இருந்தனர் என்பது வேதனைக்குரியது தான்.

**யாழ் தமிழாராய்ச்சி மாநாட்டின்போது கொல்லப்பட்டோர்**











இறந்து போன ஐவர் 14தொடக்கம் 26 அகவைக்குள்ளானவர்கள். இத்துயர நிகழ்விற்கு வித்திட்ட உதவிப் பொலிஸ் சுப்பிரிண்டன் சந்திர சேகராவின் இனவெறிச் செயலைப் பாராட்டி மதிப்பளிக்கும் வகையில், அவருக்குப் பதவி உயர்வும் பாதுகாப்பான இடத்துக்கு இடமாற்றமும் வழங்கியது அன்றைய சிறீமாவோ பண்டாரநாயக்கா அரசு. இந்த நிகழ்ச்சி தமிழ் இளைஞர்களின் உள்ளத்திலே தமக்கான உறுதியான தன்னாட்சித் தமிழ் ஈழத்தின் தேவையை ஆழமாக விதைத்ததில் வியப்பேற ஒன்றுமில்லை.[18]

### சிவகுமாரனின் வீரச்சாவு ஏற்படுத்திய பேரெழுச்சி

தமிழ் இளைஞர்கள் ஆயுதமேந்திய நிலையில் சிறீலங்கா அரசை எதிர்கொள்ள முடிவெடுத்ததற்கு, தமிழ் மக்கள் சுதந்திரத்தின் பின் பட்டறிந்த கசப்பான தோல்விகள், துயரங்கள், இழப்புக்களின் பட்டறிவுகள், மொழி இன, பண்பாட்டு வெளிப்பாடுகளுக்கு எல்லா வகைகளிலும் தடையாகவிருந்த சிங்களப் பௌத்த இனவெறி விலங்குகள் காரணமாகின. தமிழர்களின் மென்முறை எதிர்ப்புக்கள் இராணுவ வல்லமையினாலே தகர்த்தெறியப்பட்டபோது, அமைதியாகக் கேட்கப்பட்ட உரிமைக் கோரிக்கைகள் அசட்டை செய்யப்பட்டுச் சாக்கடைக்குள் வீசப்பட்டபோது, காலத்திற்குக்காலம் சிங்களவர்களால் கட்டவிழ்த்து விடப்பட்ட இனக்கலவரங்களின் புண்கள் மேலும் மேலும் ஆறாத எரிச்சலைத் தந்தபோது; நாடாளுமன்ற அரசியலினால் சிங்கள பௌத்த இனவாத நோயைத் தீர்க்க முடியாது என்ற நிலையில், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தொன்மைக்குரிய தமிழ இருப்பை உறுதி செய்யும் வகையிலே தமிழ் இளைஞர்கள் ஆயுதம் தாங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. உரும்பிராய் சிவகுமாரன்

தொடர்ச்சியான முயற்சியின் இறுதியில். சுற்றிவளைத்த சிங்களக் காவற்றுறையினரிடம் அகப்படாது தன்னைத் தானே அழித்துக் கொண்டு வீரச்சாவை அணைத்துக் கொண்டதானது, தமிழீழ விடுதலைப்போராட்ட வரலாற்றில் இளைஞர்களுக்கிடையே



பேரெழுச்சியையும், இனவுணர்வையும் கிளர்ந்தெழவைத்தது. ஈழத் தமிழரின் இழந்த உரிமையை மீட்கும் முயற்சியின் இலக்குத் தவறாத முதற்குண்டு, தமிழராய் இருந்தும் தமிழினத்துக்குத் தீமையே செய்துவந்த அல்பிரட் துரையப்பாவின் தலையில், பொன்னாலை வரதராசப் பெருமாள் கோவிலில் 27.07.1975 அன்று இறங்கியது

தமிழர்களின் விடுதலை வேட்கையும் தமிழீழச் சிந்தனை விரிவும் அதைநோக்கிய செயற்பாடுகளும் மெல்ல மெல்ல வளரத்தொடங்கின. அதேநேரம், சிறீமாவோ அரசின் இனவெறிச் செயல்களும் தொடரவே செய்தன. புத்தளம் பெரிய பள்ளிவாசலில் தொழுகை நடத்திக் கொண்டிருந்த 7 இஸ்லாமியத் தமிழர்கள் சிங்களப் பொலிசாரின் கண்மூடித்தனமான துப்பாக்கிச் சூட்டில் பள்ளிவாசலின் உள்ளே இரத்தம் சிந்தி உயிர் துறந்தனர்.

## தமிழினத்தை மேலும் நசுக்கிய ஜே.ஆரின் அரசியல் யாப்பு



1977இல் நடந்த தேர்தலில் ஐக்கிய தேசியக் கட்சி ஜே.ஆர் ஜெயவர்த்தனா தலைமையில் மிகப் பாரிய வெற்றியோடு ஆட்சிக்கு வந்தது. அதுவரை எந்தவொரு தேர்தலிலும் நேராத மாபெரும் வெற்றியது. அப்போது இருந்த தேசியப் பேரவையின் மொத்த உறுப்புரிமையான 168இல் 140ஐ ஐக்கிய தேசியக்கட்சி வெற்றிகொள்ள, சிறிலங்கா சுதந்திரக்கட்சி 8 தொகுதிகளை மட்டுமே மிகக்குறைந்த வாக்குகளினால் வெல்ல முடிந்தது. சிறிலங்கா ஒற்றையாட்சி அரசியலமைப்பை ஏற்கமறுத்து, தமிழர்களின் தாயக மீட்புக் கோரிக்கையோடு தேர்தலில் நின்ற தமிழர் விடுதலைக் கூட்டணி தான் போட்டியிட்ட 22 தொகுதிகளில் 17ஐக் கைப்பற்றியது தமிழ்ஈழம்

என்ற தனியரசிற்கான அசைக்கமுடியாத ஆணையை தமிழ் மக்கள் தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்களுக்கு வழங்கினர். பிரதமராக வந்த ஜே.ஆர் ஜெயவர்த்தனா சிறிலங்காவின் 2ஆவது குடியரசு யாப்பை உருவாக்கி, தன்னை சாவல்லமையும் நிறைவேற்றதிகாரமும் கொண்ட அதிஉத்தம அதிபராகச் செய்துகொண்டார். இந்தக் குடியரசுயாப்பும் பௌத்த நெட்டாண்டுக் கணக்கையே அலகாகக் கொண்டு 07.09.1978இல் நடைமுறைக்கு வந்தது.


புத்தளம் படுகொலையில் உயிரிழந்த இஸ்லாமிய சகோதரர்கள் இவர்கள் தாம்!

சுதந்திரன்

**புத்தளம் பள்ளிவாசல் படுகொலை பற்றி சுதந்திரன் செய்தி 1976**

தமிழர்களின் நிலைமையோ சற்றும் திருந்தவில்லை. முதலாவது குடியரசு போலவே இலங்கை ஒரு பௌத்த சிங்களக் குடியரசு என்பதை, புதிய அரசியல் யாப்பும் உறுதி செய்தது. புத்தசாசனத்துக்கு முதன்மையுடன் சீராட்டலும் சிங்களமொழிக்கு ஆளுகை மொழி அந்தஸ்தும் வழங்க இரண்டாவது யாப்புந் தவறவில்லை. 1980 வரையில் தமிழர்களின் உரிமைக் கோரிக்கை செவிடன் காதில் ஊதிய சங்காகவே இருந்தது. இராணுவ வல்லமை கொண்ட சிறிலங்கா அரசுக்கு வெறுங்கையரான தமிழர்களின் ஈனக்குரல் கேட்காமல் இருந்ததில் வியப்பேதுமில்லை. 1977 இன் பின் மெல்ல மெல்ல வளர்ச்சியடையத் தொடங்கிய ஆயுதம் தாங்கிய தமிழ் இளைஞர்கள் அவ்வப்போது சிங்களப்படையினரைத் தாக்கியபோதும், சிங்கள அரசு அக்கறை கொள்ளவில்லை. 1961 இல் கச்சேரி முன் நடந்த பெரும் சத்தியாக்கிரகப் போராட்டத்தை நசுக்க ஏவிவிடப்பட்ட இராணுவம் தமிழர் நிலங்களிலே தங்கி விட்டமையாலும் தமிழ் நிலங்களில் அமைந்த காவல் நிலையங்கள் கூட பெரும்பாலாகச் சிங்களவரையே கொண்டிருந்தமையாலும் எப்போதாவது எழக்கூடிய தமிழர் ஆயுதக்கிளர்ச்சியை முளையோடு கிள்ளிவிடலாம் என்ற நினைப்பே அரசுக்கு இருந்தது. மேலும் முப்படைக்கும் ஆட்சேர்க்கப்பட்டபோது ஓரிருவர் தமிழர்களைத் தவிர எல்லோருமே சிங்கள இனத்தவர்களாகவே சேர்க்கப்பட்டனர். எனவே "தேசியப்படை" என்ற பெயர் சிறிலங்கா பாதுகாப்புப் படைகளுக்கு எவ்வகையிலும் பொருத்தமானதல்ல. தனிச்சிங்களப் படையாக வடிவமைக்கப்பட்டு சிங்கள மாமன்னர்களினதும் தளபதிகளினதும் பெயர்களிலே அணிகள் பிரிக்கப்பட்டு தமிழர்களின் உரிமைக் குரல்வளையைத் தேவைப்படும் போதெல்லாம் நெரிப்பதற்கு

வசதியாக, வடக்கு கிழக்கு மாகாணங்களில் நிலைகொள்ள வைக்கப்பட்டிருந்தன. பாதுகாப்புப் படைச்சேர்ப்பில் மட்டும் இது நிகழ்ந்ததென்பதல்ல. தொழில்வாய்ப்பின் எல்லாத துறைகளிலும் 90இந்து மேற்பட்ட விழுக்காட்டினைச் சிங்களவர்களே பெற்றுக் கொண்டனர் இது காலப்போக்கில் இன்னும் அதிகரித்துக் கொண்டே போயிற்று. திட்டமிட்ட குடியேற்றத் திட்டங்களால் சிங்களத்தாயக எல்லை, கிழக்கில் மட்டுமன்றி வடக்கு நோக்கியும் மெல்லமெல்ல நகரத்தொடங்கியது.



1978 அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த அன்று புலிகளால் தகர்க்கப்பட்ட அரசின் விமானம்

இந்தத் திட்டங்களை அரசே செயற்படுத்தியது அல்லது இனவாதிகளான சிங்களவர் இத்திட்டத்தை நடைமுறைப்படுத்த. பொருண்மியப் பாதுகாப்புக் கவசங்களை அரசு அளித்தது சிங்களவ நகர மீள்வாழ்வு,விவசாய விரிவாக்கங்கள் என்றபெயரில் நடத்தப்பட்ட குடியேற்றங்கள் இலங்கை,இந்தியத் தமிழர்களின் இருப்பைக் கேள்விக்குறியாக்கத் தொடங்கியபோது. தமது தாயக நிலஇழப்பினால் வேதனை தமிழர்கள் தமது எதிர்ப்புக்களைப் பல்வேறு வழிகளில் காட்டத் தொடங்கினர்.

## 1977இல் ஜே.ஆரால் உருவேற்றப்பட்ட இனவெறித் தாக்குதல்

இதற்கெல்லம் சிறிலங்கா அரசு கேளாச் செவியராகவே இருந்து வந்தது. 1977இல் பிரதமரான ஜே.ஆர்.ஜெயவர்த்தனா "போரா என்றால்போர் சமாதானம என்றால சமாதானம்" என்ற விரப்புப் பேச்சுடனும் அதனைத் தொடர்ந்து, 1977இன வன்முறையுடனுந்தான் ஆட்சியைத் தொடர்ந்தார். வழமையான இனக்கலவரங்கள் போலவே, 1977இலும் தமிழர் உயிர்,உடைமை இழப்புக்களை எதிர்கொண்டனர் தமிழ்ப்பெரியவர்களின் கல்லுருக்கள் (சிலைகள்) உடைமைகள், ஊர்திகள் கோவில்கள் என்பன சிங்கள இராணுவ, காவற்படையினரால் அடித்து நொருக்கப்பட்டன. தமிழ் இளைஞர்களிடையே ஏற்பட்ட விரக்தி, அவர்களை ஆயுதக்கிளர்ச்சி மூலம் தமிழீழத்தை மீட்கவேண்டுமென்ற ஆவலை அவர்களுக்கு ஏற்படுத்தியது வியப்பல்ல. **இந்த இயக்கங்களில் 1976.05.05 ஆம் நாள் முதன்முதல் தோன்றியதுதான் "தமிழீழ விடுதலைப் புலிகள்" இயக்கம்.**

முதலில் "புதிய தமிழ்ப் புலிகள்" இயக்கமாக அது இருந்தது. திரு.வே.பிரபாகரன் தலைமையில் இன்றுவரை வலிமையும் அர்ப்பணிப்பும் கட்டுப்பாடும் நிறைந்த இயக்கமாகவும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் தமிழீழ மீட்புப் போரை நிகழ்த்திக் கொண்டிருக்கிறது. ஈரோஸ், ரெலோ, ஈ.பி.ஆர்.எல்.எப், புளொட் போன்ற பல இயக்கங்கள் தொடக்கத்தில் ஆயுதப்போராட்டத்தை நிகழ்த்த முனைந்தாலும் காலப்போக்கிலே தமது வலுவினையும் கொள்கை முனைப்பையும் இழந்து சிங்களப் பேரினவாத அரசியலுக்குள் தம்மை முற்றாகவே கரைத்துக் கொண்டன. ஈரோஸ் அமைப்பின் ஒருபகுதியினர் மட்டும் தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் நியாயத்தையும் தேவையையும் உள்ளபடி உணர்ந்து தமிழீழ விடுதலைப் புலிகளுடன் இணைந்து போராட முன்வந்தனர்.



தமிழீழ விடுதலைப்புலிகளை உருவாக்கிய தலைவர் பிரபாகரனும் அவர் உருவாக்கிய புலிகள் அமைப்பின் சின்னமும்

தமிழர் விடுதலைக் கூட்டணி தனது வட்டுக்கோட்டை மாநாட்டில் 1976 மே14 இல், தமிழீழக் கோரிக்கைகளை முன்வைத்தது. தமிழ் மக்கள் தமது விடுதலை வேட்கையை 1977 தேர்தலில் மிக ஆணித்தரமாக வெளிப்படுத்தினர். தமிழீழ விடுதலையை நோக்கிய தமது செயற்பாட்டை விரிவாக்குவதற்குப் பதிலாக த.ஐ.வி.கூ பாராளுமன்ற எதிர்க்கட்சிப் பதவியிலும், தேர்தல் அரசியலிலும் தன்னை முற்றாகக் கரைத்துக் கொண்டது. இதனால் தமிழ் மக்களிலிருந்தும் ஆயுதம் ஏந்திய தமிழ் இயக்கங்களிலிருந்தும் தன்னைப் பெரிதும் அந்நியப்படுத்திக் கொண்டது.

இருப்பினும், தமிழர் ஒருவர் எதிர்க்கட்சித் தலைவராகக்கூட இருப்பதைச் சிங்களபௌத்த பேரினவாதத்தால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அரசிலோ எதிர்க்கட்சியிலோ கடிவாளம் பிடிப்பவர்கள் சிங்களப் பௌத்தர்களாகவே இருக்கவேண்டும் என்பது அவர்களின் வரலாற்றுத் தத்துவம். இதனாற்றான் டி.எஸ்.

சேனநாயக்கா, ஜே.ஆர்.ஜெயவர்த்தனா, எஸ்.டபிள்யூ.ஆர்.டி.பண்டாரநாயக்கா போன்ற சிந்தத்தவச் சிங்களவர்கள்கூட, தம்மைப் பௌத்தசாசனத்தின் பெருந்தூதுவராக புரவலராக இனங்காட்டியே தமது பதவிகளையும் வாக்கு வங்கியினையும் தக்கவைத்துக் கொண்டனர்.

தமிழ் நிம் இந்துவுமான த.ஐ.வி.மு. செயலாளர் நாயகம் அ.அமிர்தலிங்கம் எதிர்க்கட்சித்தலைவராக வந்தபோது, சிங்கள பௌத்தப் பேரினவாதம் அவரை அப்பதவியிலிருந்து அகற்றுவதற்காக மாற்று வழியை ஆராய்ந்தது. ஆளும் ஐதேகட்சியிலிருந்து சிலர் சிறீலங்கா சுதந்திரக் கட்சிக்கு மாறி அதன்மூலமாக சிறீலங்கா சுதந்திரக் கட்சியின் உறுப்பினர் தொகை த.ஐ.விடுதலை முன்னணியின் தொகையை மேவுமாறு செய்தனர். இலங்கைப்பாராளுமன்ற வரலாற்றில் என்றுமே நிகழ்ந்திராத வகையில் எதிர்க்கட்சித்தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றி, உலகில் எங்கும் நடக்காத புதுமையையும் சிங்கள இனவாதம் அரங்கேற்றியது. தமிழரான எதிர்க்கட்சித் தலைவர் தனது வாய்ப்பினை இழக்க அந்த இடத்தை அநுர பண்டாரநாயக்கா பிடித்துக் கொண்டார். தமிழர்களுக்கு வாய்ப்பையும் உரிமையையும் மறுப்பதில்,



**1979ஆம் ஆண்டு சிங்களப் படையினரால் வீட்டிலிருந்து பிடித்துச் செல்லப்பட்டு, படுகொலை செய்யப்பட்டு தெருவில் வீசப்பட்ட இன்பம் செல்வம்.**

சிங்கள அரசு எவ்வளவு உறுதியும் கவனமுமாக இருந்தது என்பதற்கு இந்த நிகழ்வு ஒரு நல்ல சான்றாகும். கொஞ்சம் கொஞ்சமாக தாயக நிலஇழப்பு கல்வி, பொருண்மிய இழப்பு போன்ற வன்கொடுமைகளுக்காளான தமிழர் செயலற்றிருந்த த.ஐ. விடுதலை முன்னணியிலிருந்து தம்மை விலக்கிக் கொண்டு, விடுதலைப் போரில் ஈடுபட்ட தமிழ் இளைஞர்களுக்கு அனுதாபமும் ஆதரவும் காட்டத் தொடங்கினர்

1971இல், ஜே.வி.பி. இயக்கததைக் கருணையேதுமினறி நசுக்கிய சிங்கள ஆட்சி தமிழர்களைச் சும்மா விடுமா?



1977 இனவெறித்தாக்குதலின் போது எகாயங்களுக்குள்ளான குழந்தைகள்.



1979 இல, நிறைவேற்றப்பட்ட பயங்கரவாதத் தடைச்சட்டம் என்ற கொடுஞ்சட்டத்தினால் தமிழ இளைஞாகள் கேவலமான வகையில ஒடுக்கப்பட்டனா பல இளைஞாகள சிங்கள ஆயுதப்படையினரின் தாங்கொணாச் சித்திரவதைக்கு ஆளாயினா பல தமிழ் இளைஞாகள் கொல்லப்பட்டு பல இடங்களிலும் எறியப்பட்டனர். நவாலியில இன்பம். செல்வம் ஆகிய இளைஞாகள் கொடூரமாக, வெட்டிச் சிதைக்கப்பட்டு யாழ் பண்ணைவெளியிலே வீசப்பட்டனா குட்டிமணி உட்பட நூற்றுக்கணக்கான இளைஞாகள கைது செய்யப்பட்டுக் கொடுஞ் சிறையில அடைக்கப்பட்டனா

சிங்கள அரசினதும் பேரினவாத சிங்கள மக்களினதும் பார்வையில இந்தத் தமிழ இயக்கங்கள் பயங்கரவாத இயக்கங்களாகவும் அழித்தொழிக்கப்பட வேண்டியவையாகவுமே பார்க்கப்பட்டன. தமிழாகளின் நியாயமான கோரிக்கைகளும அடக்குமுறைகளுக்குள்ளே அவாகள் வடித்த கண்ணீரும துயரங்களும அரசின் கண்களுக்குப் புலப்படவில்லை தமிழ அரசியற் கட்சிகளின வன்முறையப் போராட்டங்களும அதைத் தொடர்ந்து, கொழும்பிலும் புறநகரங்களிலும் சிங்களவர்களின இனவெறியாட்டங்களும காலத்துக்குக் காலம் தொடர்ந்தாலும் சிலநாட்களுக்குள் கட்டுப்பாட்டுக்குள் அவை கொண்டுவரப்பட்டன காலங்காலமாக சிங்களப்படைகளின் (இராணுவத்தினரது) வெறியாட்டங்களில





1977 இனவெறித்தாக்குதலின் போது கொல்லப்பட்டோர்.

பல்நூற்றுக்கணக்கான தமிழ் மக்கள் கொன்று குவிக்கப்பட்டபோதும், உடைமைகள் சூறையாடப்பட்டபோதும், தமிழ்ச் சான்றோர்களின் கல்லுருவங்கள் நொருக்கப்பட்ட போதும் அறிவுச்சுரங்கமெனத் திகழ்ந்த நூல்நிலையம் தீக்கிரையாக்கப்பட்டபோதும் அமைதியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சிங்களப் பேரினவாதிகள், 1983 யூலை 23ஆம் நாள், 13 இராணுவத்தினர் யாழ்ப்பாணம் திருநெல்வேலியில் வைத்து தமிழீழ விடுதலைப்புலிகளினாற் கொல்லப்பட்டபோது, பொங்கி எழுந்து தமிழினத்திற்கு எதிராகத் தென்னிலங்கையில் ஆடிய வெறியாட்டமும் இனப்படுகொலைகளும் உலகம் நன்றாக அறிந்ததுதான்.

சிங்களப்பகுதிகளில் வாழ்ந்த தமிழர்களின் சொத்துக்களோடு சேர்த்து அவர்களும் எரிக்கப்பட்டனர். வெலிக்கடைச் சிறைச்சாலையில் சிங்களக்கைதிகளால் அங்கு வைக்கப்பட்டிருந்த தமிழ் அரசியற்கைதிகள் அடித்துக் கொல்லப்பட்டனர். யூலை 25இல், 35பேரும் 27இல், 17பேரும் மிகக்கேவலமான முறையிற் சாகடிக்கப்பட்டனர். டெலோத் தலைவர்களான குட்டிமணி, தங்கத்துரை போன்றோரும் இம் மிருகத்தனமான தாக்குதல்களிற் சாவடைந்தனர். குட்டிமணியின் கண்கள் பிடுங்கி எறியப்பட்டு சிறைச்சாலை வளாகத்துள் இருந்த புத்தர் சிலைக்குப் படைக்கப்பட்டன. ஏதிலிகளாக எங்கும் ஓடி அகதி முகாம்களுக்குள் புகுந்த தமிழர்கள்கூடத் தாக்கப்பட்டனர். இவ்வளவு நிகழ்ச்சிகளும் நடந்தபோது தடுத்து நிறுத்துவதற்குச் சிங்களக் காவலர்களோ இராணுவத்தினரோ முன்வரவில்லை. தமிழர்கள் தார் போட்டு எரிக்கப்படுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். அல்லது தாக்குதலில் தாமும் பங்கு கொண்டனர். இக்கலவரத்திலேயே 2000இற்கு மேற்பட்ட தமிழர்கள் உயிரை இழந்தனர். 1,000,000இற்கும் மேற்பட்டோர் வீடற்றவராகினர்.



1981 இல் சிங்கள இனவெறியரால் தீக்கிரையாக்கப்பட்ட யாழ் நூல் நிலையம்

தமிழர்களுக்கு உரிமையான 70இற்கு மேற்பட்ட தொழிற்சாலைகள் தரைமட்டமாக்கப்பட்டன. பலநூறுகோடி ரூபா பெறுமதியான தமிழர் உடைமைகள் சூறையாடப்பட்டன. எரியூட்டப்பட்டன. இனப்படுகொலை தற்செயலாக உணர்ச்சியாலே தூண்டப்பட்டு நிகழ்ந்த செயலல்ல. அரசினால் நன்கு

வெலிக்கடை சிறைச்சாலையின் வாசற்பகுதி

திட்டமிடப்பட்டு, ஒரு வாய்ப்புக்காகக் காத்திருந்து அரங்கேற்றப்பட்ட நிகழ்வுதான் அது. உலக நாடுகள் இந்த நிகழ்வை மிகவும் கண்டனம் செய்த பிறகுதான் சிங்கள அரசு கண்விழித்துச் செயற்பட முன்வந்தது


1983இல் கொழும்பில் எரியூட்டப்பட்ட தமிழரின் உடைமைகளில் சில.

## ஜே.ஆர் கக்கிய உள்ளத்து உணர்வுகள்

பௌத்த கலாசாரத்துக்கு எதிரான இந்நிகழ்வு இனிமேல் நடவாது என்று காலத்துக்குக் காலம் சிங்கள அரசு வாக்குறுதியளிப்பதுண்டு. உலக நாடுகள் இனப்படுகொலையைக் கண்டிக்கத் தொடங்கியதே காரணமாகும். இதனைத் தொடர்ந்து வெளிநாட்டுப் பத்திரிகையாளருக்குப் பேட்டியளித்தபோது சிறீலங்கா அதிபர் ஜே.ஆர்.ஜெயவர்த்தனா கூறிய வார்த்தைகள், தமிழர் பற்றிய சிங்கள அரசின் உள்ளக்கிடக்கையை உள்ளபடி வெளியிட்ட வார்த்தைகளாகும்.

"தமிழர்களின் பாதுகாப்புக்கு நான் பொறுப்பேற்க முடியாது. தமிழர்கள் பற்றிய உணர்வுகள் பற்றி எனக்கு எவ்வித அக்கறையுமில்லை." என்று ஜே.ஆர்.ஜெயவர்த்தனா இவ்வார்த்தையை இவ்விதம் வெளிப்படையாகவே கக்கினார். தமிழர் பிரச்சினையைத் தீர்த்து வைப்பார் என்ற நைந்த ஆசையோடு கொழும்பிலே ஒட்டிக்கொண்டு இருந்த நடுத்தரவர்க்கத் தமிழர்கள்கூட இவ்வார்த்தைகளால் அதிர்ச்சியடைந்து, தம் அரச விசுவாசக் கொள்கையை மாற்றிக்கொள்ளத் தூண்டப்பட்டனர். ஆரம்பத்தில் இவ் இனப்படுகொலையை நியாயப்படுத்தவே அரசு முனைந்தது.

சிறீலங்கா எனும் பெயரிலான அரச வெளியீடு (வெளிநாட்டுத் தகவல் 6) 'பயங்கரவாதிகள் தமது (சிங்கள) இளைஞர்களைச் சுட்டுக் கொல்லுகின்ற காரணத்தினால் சிங்கள மக்கள் தமிழ்ப் பயங்கரவாதிகளின் உறவினர்களைப் பணயமாகப் பிடித்து வைத்துள்ளனர்' என்று செய்தியை வெளியிட்டது. அரச வெளியீட்டில் இன்னொரு பிரச்சாரம் 'கொழும்பிலே தமது சொந்த மக்கள் (தமிழர்கள்) வெட்டி எறியப்பட்டபோது, அவர்களுக்காகப் பயங்கரவாதிகள

கொழும்புக்கு வரவில்லை என்று எள்ளிநகையாடியது. இந்த இனப்படுகொலை தமிழர்களைப் பொறுத்தவரை அவர்களது சகிப்புத்தன்மைக்கும் தாங்கும் சக்திக்கும் அப்பாற்பட்டதாய அமைந்துவிட்டது. இதற்குப் பின்னரும் சிங்களமக்களோடு ஒன்றுகலந்து, ஒன்றிணைந்து சிறீலங்காவுக்குள் தமிழர்கள் தமது நல்வாழ்வை உறுதி செய்துகொள்ள முடியுமென்று எவர்தான் நினைப்பர்?

இதைத் தொடர்ந்து தமிழ் இளைஞர்களின் இயக்கங்கள், குறிப்பாகவும் சிறப்பாகவும் தமிழீழ விடுதலைப்புலிகள், தமது ஆயுதப் போராட்டத்தைக் கூர்மைப்படுத்தத் தொடங்கினர். கிளர்ச்சியை அடக்குதல் என்ற போர்வைக்குள் அரசு செய்த பயங்கரவாத வெறியாட்டங்கள் கொஞ்சமல்ல. தமிழர் நிலங்களில் ஒவ்வொரு பிரதான இடத்திலும் முப்படை முகாங்கள் அமைக்கப்பட்டன. கொலை, சித்திரவதை, கேள்விமுறையற்ற கைது, காணாமற்போதல் உச்சநிலைக்கு வந்தன. முப்படைகளின் கூடுபடையாற்றல் தமிழ்ப்பொதுமக்களின் உயிர் உடைமைகளை அழிக்கத் தொடங்கியது.


லலித் அத்துலத் முதலி

### அரசு கட்டவிழ்த்த பயங்கரவாதம்

விடுதலைப்புலிகள் இராணுவத்தின் மீது மேற்கொள்ளும் ஒவ்வொரு தாக்குதலுக்கும் பின்விளைவாக, தாக்குதல் நடந்த இடத்திற்கு அருகாமையிலுள்ள அப்பாவித் தமிழ் மக்கள் தாக்கப்பட்டனர்; உடைமைகள் அழிக்கப்பட்டன. வெறிகொண்ட சிங்களப் படைகளின் இந்த வன்கொடுமைகள் அரசின் கட்டளையோடு நடந்தன. பொழுது போக்காகவும் நிகழ்ந்தன. 1984இல், அரச படைகளின் அட்டூழியத்தை நியாயப் படுத்தினார், அப்போதைய தேசியப் பாதுகாப்பு அமைச்சர் லலித் அத்துலத்முதலி. தமிழ்ப் பொதுமக்கள் பயங்கரவாதிகளுக்கு வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ உதவியளிக்கின்றனர் என. அவர் வாதிட்டார். மக்கள் நிறைந்திருந்த சுன்னாகச் சந்தையிலே கண்மூடித்தனமான துப்பாக்கிச் சூடு. யாழ்ப்பாணத்திலுள்ள கோவில்கள், கடைகள் மீது கனரக ஆயுதத் தாக்குதல். வல்வெட்டித்துறையில் கடல் வான் பகுதிகளிலிருந்து பீரங்கித் தாக்குதல். மன்னார் நகரத்தின் எல்லாக் கடைகளையும் எரித்துத் தரைமட்டமாக்கல் என அரசபயங்கரவாதம் தமிழர் மீது கட்டவிழ்த்து விடப்பட்டது.

## அத்துலத்முதலி உருட்டிய மனிதக்கழிவுப் பீப்பா

இத்தகைய வான தாக்குதல்களின்போது வானூர்தியில் தானே ஏறிவந்த பாதுகாப்பு அமைச்சர் லலித் அத்துலத்முதலி, தமிழர் தலைகளில மனிதக் கழிவுகள் அடைக்கப்பட்ட பீப்பாக்களை வீசினார். தமிழர்களின ஆன்மாவைக் காயப்படுத்தும் இவ்விதச் செயல்களால் தமிழர் அச்சம் கொள்வதற்குப் பதில் கிளர்ந்தெழுந்து தாயக மீட்பில உறுதி பூண்டனர். திட்டமிட்ட வகையில் தமிழர் வீடுகளில் தேடுதல். ஆயிரக்கணக்கான இளைஞர்கைது நாளதோறும நிகழ்ந்தன. கைது செய்யப்பட்டவர்கள் தெற்கிலுள்ள சிறைகளிலே காரணகாரியமின்றி அடைத்து வைக்கப்பட்டனர். நீண்டகால ஊரடங்குகள், கடலோர மீன்பிடித்தடைகள், ஊர்திப்பயணத்தடைகள் என அடுக்கடுக்காக விதிக்கப்பட்ட தடைகளால, தமிழரின் அன்றாட வாழ்வும் பொருண்மிய நடவடிக்கைகளும் திடீரெனச் செயலற்றுப் போயின.

உண்மையில் அரசுக்கெதிரான தமிழ் இயக்க நடவடிக்கைகளின் விலையை தமிழ்ப்பொதுமக்கள் செலுத்த வேண்டுமென்றே அரச இராணுவம் எதிர்பார்த்தது. இதனால், தமிழ் மக்களின இழப்பு, இறப்பும் உயர்ந்து கொண்டே போயின. இத்தகைய நடவடிக்கைகளினால தமிழ் மக்கள், தமிழ்ப் போராளிகளுக்கு மாறான போக்கைக் கைக்கொள்வர் என்றே சிங்கள அரசு எதிர்பார்த்தது. ஆனால், மக்களின் மனம் தமிழ்ப் போராளிகளை நோக்கியே சென்றது. கொடுமையின் அளவைத் தாங்கமுடியாத கரையோரத் தமிழமக்கள இந்திய மண்ணுக்குத் தப்பியோடத் தொடங்கினர். 1984இன் இறுதியில, 90,000 மக்களுக்கு மேல இந்திய மண்ணில் புகலிடம் தேடியிருந்தனர். இந்த அகதிகள் பிரச்சினைதான, இலங்கைப் பிரச்சனை மீதான தவிர்க்க முடியாத அக்கறையை இந்தியாவுக்குக் கொடுத்தது.

## ஜே.ஆரின் மாயவலையில் மயங்கிய த.வி.கூட்டணி

ஜே.ஆர் ஜெயவர்த்தனா தனது ஆட்சிக்காலத்தில் நடத்திய அரசியல நாடகங்கள் ஒவ்வொன்றும் தமிழர்களைப் பொறுத்தவரை, அவர்களின ஏமாற்றத்தை அதிகரித்துக் கொண்டே சென்றன 1980 இல, மாவட்ட அபிவிருத்திச் சபைகள் மசோதாவை ஜே.ஆர் கொண்டு வந்தார். இதன் மூலமாக ஆட்சியுரிமை பரவலாக்கப்படும என உறுதிசொன்னார். இந்தச் சபைகள தமிழர்களின எவ்வித எதிர்பார்ப்புக்களையும் நிறைவேற்றப்போவது இல்லை என்றே தமிழர்கள கருதினர். ஆயுதந் தாங்கிய இளைஞர்கள் முற்றாகவே இந்தச் சபைகளை எதிர்த்தனர். ஆயினும், தமிழர் விடுதலைக்கூட்டணி தமிழ் மக்களின் உணர்வுகளுக்கு மாறாகத் தேர்தலிலே போட்டியிட்டது தமிழ் மக்கள விடுதலைக்கூட்டணியின மீது சலிப்புக் கொண்டிருந்த போதிலும சிங்கள அரசின் மீதேற்பட்ட வெறுப்பினால், தமிழ் மக்கள் அரசை எதிர்த்து, தமிழர் விடுதலைக் கூட்டணிக்கு வாக்களித்தனர்.

அம்பாறை தவிர்நத அனைத்துத் தமிழ் மாவட்டங்களிலும் த.வி.கூ பெரும் வெற்றி பெற்றுக்கொண்டது.

இந்த மாவட்ட அபிவிருத்திச் சபைகளின் உயிர்ப்போ, செயற்பாடோ சிங்கள மத்திய அரசினதும், ஜே.ஆர் ஜெயவர்த்தனாவினதும் கையிலே இருந்ததால், தமிழர் விடுதலைக்கூட்டணி எதிர்பார்த்ததுபோல மாவட்ட அபிவிருத்திச் சபைகள இயங்குவதற்கான நிதியை அளிப்பதற்குக்கூட மத்திய அரசு தயாராக இருக்கவில்லை. இச்சபைகள் சட்டமியற்றும் எவ்வித வலுவையும் கொண்டு இருக்கவில்லை அத்தோடு நாடாளுமன்றத்தினால், எந்த வேளையிலும் கலைக்கப்படக்கூடிய ஒரு பொம்மைச் சபையாகவே மாவட்ட அபிவிருத்திச் சபை இருந்தது இந்த மாவட்ட அபிவிருத்திச் சபையிலும் நாடாளுமன்றத்திலும் உறுப்புரிமை வகிப்பதற்கு, சிறீலங்கா குடியரசு யாப்புக்கு உறுதியுரை செய்யுமபடி வற்புறுத்தப்படும் தேசியக் கொள்கையை, அரசியல் அமைப்பில் 6 ஆவது திருத்தத்தினூடாகக் கொண்டு வந்து சிங்கள அரசு நடைமுறைப்படுத்த முயன்றபோது, இந்தக் கொள்கையின் பின்னால் உள்ள இனவெறியை இனங்கண்டுகொண்ட தமிழர் விடுதலைக் கூட்டணியினரால், தமது இந்தக் கொள்கையில் விடாப்பிடியாகத் தொடர்ந்து நீடிக்க முடியவில்லை.

தனிப்பட்ட அரசியல் நலன்களுக்காகப் பிறபாடு, அவர்கள் நாடாளுமன்றத்தில் சிறீலங்கா குடியரசு அரசியலமைப்புக்கு நம்பிக்கை தெரிவித்து உறுதியுரை செய்து கொண்டனர். 1983 இனவன்முறையின் பின்னர், தமிழ்ப் போராளிகள் தந்த நெருக்குதல்களினாலும், இந்திய அரசின் வற்புறுத்தலினாலும், பேச்சுவார்த்தை மேசைக்கு வரவேண்டிய ஒரு நெருக்கடிக்கு ஜே.ஆர். ஆளாகினார். இந்திய அரசு தனது சிறப்புத் தூதர்களைக் கொழும்புக்கு அனுப்பியது. 'இணைப்பு சி' என்னும் திட்டமும் உருவாகியது. இதன் மூலம் பேச்சுவார்த்தைக்கான அடிப்படைகளாக இந்தியா சில கோரிக்கைகளை முன்மொழிய, அவற்றை ஏற்ற ஜே.ஆர்.ஜெயவர்த்தனா 1984 சனவரிமாதம் அனைத்துக் கட்சி மாநாட்டைக் கூட்ட நாடகுறித்தார். இந்தியாவினுடைய முன்மொழிவானது அதிகாரப் பரவலாக்கல், தமிழர்களின் பாதுகாப்புக்கான சில உறுதிமொழிகள் ஆகியவற்றைப பெயரளவிலேனும் உள்ளடக்கி இருந்தமையால், சிங்கள இன வெறியும் பௌத்த மடங்களும் சீறத் தொடங்கின. வழமைபோல இந்தச் சமாதானப் பேச்சுவார்த்தைத் திட்டங்களும் "அகாலச்சாவடைய", வடக்கு, கிழக்கிலே தமிழ்ப் போராளிகளுக்கு எதிராக ஜே.ஆர்.ஜெயவர்த்தனா போரை முடுக்கி முரப படுத்தத் தொடங்கினார்.

## இந்தியத் தலையீட்டால் முகிழ்த்த திம்புப் பேச்சுவார்த்தை

தமிழர்களுக்கு இழைக்கப்படுகின்ற அநீதியின் பருமனை உள்ளபடி உணர்ந்த அன்றைய **இந்தியப் பிரதமர் திருமதி இந்திராகாந்தி,** தனது ஆதரவுக் கரத்தினைத் தமிழர்களுக்கு நீட்டினார். இலங்கையில் நடப்பது தமிழர்களுக்கு எதிரான இனப்படுகொலையே என உறுதிபடக் கூறினார்.

தமிழகத்திலே வளர்ந்து கொண்டேபோன அகதிகள் பிரச்சினையும், தமிழக மக்களது உணர்ச்சிபூர்வமான தமிழின ஆதரவு எழுச்சியும், தமிழ் மக்களுக்கு எதிராகச் சிறீலங்கா அரசு செய்துவந்த இன ஒடுக்கு முறையின் அப்பட்டமான வெளிப்பாடும் இலங்கை மீதான இந்தியத் தலையீட்டை ஊக்குவித்தது. ஜே.ஆர் ஜெயவர்த்தனா இந்தியாவின் தலையீட்டை உள்ளூர விரும்பவில்லையெனினும், சூழ்நிலையின் அழுத்தத்தால் அதனை ஒப்புக்கொள்ள நேரிட்டது. எனினும், எதிர்பாராத வகையில் திருமதி இந்திராகாந்தி கொலை செய்யப்பட்டார். தமது நம்பிக்கை ஒளியாக அவரை நினைத்த ஈழத்தமிழ் மக்கள், அவரின் மறைவினால் பெரிதும் கலங்கிப் போயினர். திருமதி இந்திராகாந்தியைத் தொடர்ந்து பிரதமரான அவரது மகனான ராஜீவ்காந்தி தமக்குப்பரிவாக இருந்து தமது துன்பங்களை ஆற்ற உதவுவார் என்றே தமிழ் மக்கள் பெரிதும் எதிர்பார்த்தனர்.



இந்தியாவுடன் தவி.கூ ஒருபுறமும் ஜே.ஆர் ஜெயவர்த்தனா ஒரு புறமுமாக நடத்திய பேச்சுவார்த்தைகளைத் தொடர்ந்து, 1985.07.08இல் பூட்டானின் தலைநகரான திம்புவில் மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. தவி.கூட்டணி, தமிழீழ விடுதலைப் புலிகள் உள்ளிட்ட 05 தமிழ் இயக்கங்கள் ஒரு புறமாகவும் ஜே.ஆர். ஜெயவர்த்தனாவின் தம்பி எச்.டபிள்யூ. ஜெயவர்த்தனாவின் தலைமையில் அரச பிரதிநிதிகள் ஒருபுறமாகவும் இப் பேச்சுவார்த்தையிற் கலந்து கொண்டனர்.

தமிழர்கள் எல்லோரும் ஒருமித்து, தமிழீழ விடுதலைப் புலிகளால் ஆக்கப்பட்ட விடுதலைப் பட்டயத்தின்படி பேச்சுவார்த்தையின் அடிப்படையாக நான்கு கோரிக்கைகளை முன்வைத்தனர். "(1) தமிழர்களைத் தனித்தேசிய இனமாக ஒப்புக்கொள்ளல், (2) தமிழரின் தாயகத்தை ஒப்புக்கொள்ளல், (3) தமிழர்களின் சுயநிர்ணய உரிமையை ஒப்புக்கொள்ளல், (4) இலங்கையிலுள்ள தமிழர்கள் அனைவருக்கும் குடியுரிமை வழங்கல், என்பனவே அவ் அடிப்படைக் கோரிக்கைகள். மிகக்குறைந்த அடிப்படைக் கோரிக்கைகளான இந்த நான்கில் ஒன்றைத்தானும் ஒப்புக் கொள்வதற்கு ஜே.ஆர் ஜெயவர்த்தனா தயாராக இருக்கவில்லை. தமிழர் ஒரு தேசிய இனமாகவோ, பாரம்பரிய தாயகத்தைக் கொண்டவர்களாகவோ இருக்கக்கூடாது என்பதற்காகவே வடக்கு, கிழக்கு மாகாணங்களிலமைந்த ஒரே தொடர்பான நிலத்தைக் கூறுபடுத்தி வெட்டும் வகையில் மதுறுஓயா, வெலிஓயா, கல்லோயா போன்ற திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களை முனைந்து செய்துவரும் சிங்கள இனவாதத்துக்கு இக் கோரிக்கைகளை ஒப்புக்கொள்ளும் மனப்பாங்கு இருக்கும் என எவரும் எதிர்பார்க்க முடியாது. ஆணைமடுவிலிருந்து



தமிழர் நிலத்தில் குடியேறிய சிங்கள இளைஞர்களுக்கு ஆயுதப்பயிச்சி வழங்கும் ஜே.ஆரின் மகன் ரவி ஜெயவர்த்தனா

ஆனையிறவு வரை சிங்களக் குடியேற்றம் செய்யப்படவேண்டும் என்று வெளிப்படையாகவே பேசியவர் சிறீலங்கா அதிபர் ஜே.ஆர் ஜெயவர்த்தனா. வெலிக்கடைச் சிறையில் தமிழ் இளைஞர்களைப் படுகொலை செய்த பயங்கரவாதச சிங்களக் குண்டர்களை அரசபடைத் துணையோடு தமிழ் மண்ணான மணலாற்றில் குடியேற்றி. அவர்களுக்குத் தமிழர்களை எதிர்பதற்கான போர்ப்பயிற்சியும ஆயுதங்களும் கொடுத்து அனுப்பியவர் ஜே.ஆர்.ஜெயவர்த்தனாவின் மகனான ரவி ஜெயவர்த்தனா.

பௌத்த மடங்கள் எல்லாம் சேர்ந்து, சிங்களவர்களின் ஒவ்வொரு கிராமத்திலும் 1,000 பேருக்குப் போர்ப்பயிற்சி அளித்து 500,000 சிங்களவரைத் தமிழ் நிலங்களுக்கு, குடியேற்ற அனுப்பவேண்டுமமென்று தீர்மானம் எடுத்தன. இத்தகைய இனவெறி கொண்ட அரசின் தலைமையை ஏற்றிருந்த ஜே.ஆர் ஜெயவர்த்தனா தமிழர்கள் முன்வைத்த கோரிக்கைகளை அறவே புறந்தள்ளி மறுத்ததுடன், தனது இராணுவ வலிமையை தமிழ் மக்கள் மீது உச்சவிரைவில் பயன்படுத்தி, நூற்றுக்கணக்கான தமிழர்களின் உயிரை உறிஞ்சினார். இதனைத் தொடர்ந்து பேச்சுவார்த்தையிலிருந்து தமிழ் இயக்கங்கள் வெளியேறின. பேச்சுவார்த்தையும் முறிவடைந்தது.

திம்பு முதற்கட்டப் பேச்சுவார்த்தை முறிந்ததும் ஜே.ஆர் ஜெயவர்த்தனா இன்னொரு திட்டத்தை முன்வைத்தார். வடக்கு மாகாணசபையும், கிழக்கு மாவட்ட சபைகளும் என்பதே இந்தத் திட்டம். தமிழர் தாயக நிலமான வடக்கையும் கிழக்கையும் நிரந்தரமாகத் துண்டாடும் இந்த வஞ்சகத் திட்டத்தில் அதிகாரப் பரவலாக்கல் என்பது மருந்துக்கும் இல்லை. இதனைத் தமிழ் இயக்கங்கள் முற்றாக ஏற்கமறுத்தன. வடக்கு, கிழக்கு மாகாணங்களில் மொழிவாரியாக இணைந்த இணைப்பாட்சி வடிவிலான மாநிலமொன்றை அமைத்தல் வேண்டுமென்ற தமிழர் விடுதலைக் கூட்டணியின் முன்மொழிவும் சிறீலங்கா அரசால் மறுக்கப்பட்டது.

உடன்படிக்கைகள், முறிவுகள் என்பன இன்னும், இன்னும் தொடரவே செய்தன. சிறீலங்கா அரசின் இனவாத அடிப்படை, உண்மைகளின் மீது அல்லாமல் கர்ணபரம்பரைக் கதைகளின் மீதே அமைக்கப்பட்டிருந்ததால், தமிழர்களின் கோரிக்கையிலுள்ள நியாயம் அவர்களின் கணக்குக்குப் படவில்லை. வட்டமேசை மாநாடு, உடன்படிக்கைகள் என்னும் நாடகங்களை அவ்வப்போது ஆடினாலும் இராணுவ ரீதியில் தமிழர்களை வென்று கொள்வதிலேயே சிங்கள ஆட்சியாளர்கள் குறியாயிருந்தனர்.

1986 ஏப்ரலில், இலங்கைக்கு வந்த இந்திய அமைச்சர் சிதம்பரம், ஜே.ஆர் ஜெயவர்த்தனாவுக்குத் தெரிவித்த தீர்வு யோசனைகள், 1986 நவம்பரில் ஜே.ஆர் ஜெயவர்த்தனா-ராஜீவ் பேச்சுவார்த்தைகள், இவையெல்லாம் தமிழர்களின் நேரடிப் பங்களிப்பு எதுவும் இன்றிச் சாவடைந்தன.

## "ஒப்பிரேசன் லிபரேசனும் பிரபாகரன் எடுத்த உயிராயுதமும்"

1987இல் தமிழர் மீதான சிங்கள அரசின் ஒடுக்குமுறை தனது உச்சத்தை எட்டியது. பெரும் பொருளாதாரத் தடையைத் தமிழர் மீது விதித்தது. 1987மே 26 இல், "ஒப்பரேசன்லிபரேசன்" என்ற பெயரில் கண்மூடித்தனமான பெரும் இராணுவ நடவடிக்கையை ஆரம்பித்தது. போரியல் நடைமுறைக்கு மாறாக எறிகணைகளை எண்ணிக்கையற்றளவு ஏவி எரியூட்டி, எண்ணிக்கையற்ற தமிழ் மக்களைக் கொன்றுகுவித்தது. வடமராட்சியின் சில பகுதிகளைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தது. ஆயினும், தமிழீழ விடுதலைப் புலிகளின் அர்ப்பணிப்பு நிறைந்த விடுதலைப் போராட்டத்தினால் சிறீலங்கா இராணுவம் எதிர்பாராத வகையில் பல பின்னடைவுகளையும் ஆளணி இழப்பையும் எதிர்கொள்ள நேர்ந்தது. முதலில் விடுதலைப்புலிகள் இயக்கத்தின் தலைவர் பிரபாகரன் அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட உயிராயுதத்தை ஏந்திய கரும்புலி மில்லரின் தற்கொலைத் தாக்குதல், இராணுவத்தின் வெற்றி மனோநிலையை உடைத்தெறிந்தது. நொடிப்பொழுதில் நூற்றுக்குமேற்பட்ட சிங்களப் படையினர் கொல்லப்பட்டனர். இதேவேளையில், வாய்ப்பைப் பயன்படுத்தி, தெற்கிலே ஜே.வி.பி.கிளர்ச்சியாளரால் மேற்கொள்ளப்பட்ட எழுச்சி, சிறீலங்கா அரசுக்குப் பெருந்தலையிடியாக இருந்தது. இரண்டு போர்களை ஒரேநேரத்தில் வெல்ல முடியாதெனக் கணக்குப்போட்ட சிறீலங்கா அரசு, இந்திய அரசின் கால்களில் விழுந்தது.


கரும்புலி கப்டன் மில்லர்.



1987 யூலை 29இல் இலங்கை-இந்திய உடன்படிக்கையில் ராஜீவ்-ஜே.ஆர் கையெழுத்து இடுகின்றனர்.

இந்திய அரசும் இத்தகையதொரு வேளையைத் தான் எதிர்பார்த்திருந்தது அமெரிக்காவின்பக்கம் சாய்ந்து கொண்டிருக்கும் சிறீலங்காவை எச்சரித்து, தனது கைப்பகத்துக்குள் வைத்திருக்கவும் தனது பிராந்திய நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் இந்த நேரத்தை இந்தியா முறையாகப் பயன்படுத்திக் கொண்டது. இந்திய விமானங்கள் வடக்கு மாகாணத்திலே பறந்து உணவுப் பொட்டலங்களைப் போட்டுச் சென்றமை வார்த்தைகளில் சொல்லப்படாத கடும் எச்சரிக்கையாகவே சிறீலங்கா அரசுக்குத் தெரிந்தது.

### தமிழர் எதிர்பார்ப்பைப் புறந்தள்ளிய இலங்கை - இந்திய உடன்படிக்கை

இந்திய அரசும், சிறீலங்கா அரசும் தமிழர் நலன்களைக் கணக்கிற் கொள்ளாது தத்தம் நலன்களைப்பேணும் அடிப்படையிற் செய்துகொண்டதே இலங்கை. இந்திய அமைதி உடன்படிக்கை ஆகும். தமிழ் மக்களுக்காக, தமிழ் மக்களின் பங்களிப்பு ஏதுமின்றி இந்திய. சிங்கள அரசுகளுக்கிடையிற் செய்யப்பட்ட உடன்படிக்கை என்ற வகையில். அந்த உடன்படிக்கை உலகில் மிகவும் பேசப்பட்டது இந்திய. இலங்கை உடன்படிக்கை என்பது வெறும் ஏட்டுச்சுரைக்காய் என்பதோடு சிறீலங்காவின் அதிபர் ஜே.ஆர் ஜெயவர்த்தனா தனது மாக்கியவெல்லி அரசியல் தந்திரத்தால் இந்தியாவையும் உலகத்தையும் ஒரேநேரத்தில் ஏமாற்றியதோர் ஏற்பாடாகவே அது அமைந்தது. இந்தியாவைப் பொறுத்தவரையில

தனது பிராந்திய அரசியல் நலனைக் காப்பாற்றுவதற்காகச் சிறீலங்காவுடன் செய்து கொண்ட ஒரு பொருத்தனையாக அது அமைந்தது.

40 ஆண்டுகால ஈழத்தமிழர் சிக்கலுக்குத் தீர்வு காண்பதற்கெனச் செய்துகொள்ளப்பட்ட இந்த உடன்படிக்கை ஈழத்தமிழர்களது போராட்ட நியாயங்களையோ வாழ்வியல் அவாவினையோ எந்த வகையிலும் கணக்கிலெடுத்து மதிப்பளிக்கவில்லை. அடையாளங்கண்டு சிக்கல்களைத் தீர்க்கவுமில்லை.

1987 ஆம் ஆண்டு யூலை மாதம் 29 ஆம் நாள், ஜே.ஆர் ஜெயவர்த்தனாவுக்கும் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்திக்கும் இடையிலே இந்த உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. இலங்கை ஒரு பல்தேசிய பன்மொழி நிலவும் நாடு




எனவும் ஒவ்வொரு இனமும் தனித்தனியான மொழி, பண்பாட்டு அடையாளங்களைக் கொண்டது எனவும், வடக்குக் கிழக்கு மாகாணங்கள் தமிழ் பேசும் மக்கள் மற்றும் இனங்களோடு வாழ்ந்து வரும் பாரம்பரிய வாழ்விடங்கள் எனவும் இலங்கை இந்திய உடன்படிக்கை ஏற்றுக் கொண்டது. இந்த ஏற்பாடுகள் எவையுமே நடைமுறைக்கு வரவில்லை. சிங்களப் பௌத்த பேரினவாதம் வழக்கம்போலச் சீறியெழுந்து கொழும்பு நகரை முற்றுகையிட்டது.

சிறீலங்காவின் பிரதமரான ரணசிங்க பிரேமதாச முதல், கிளர்ச்சி அமைப்பான ஜே.வி.பி. பௌத்தப் பிக்குகள், இனவெறிச் சிங்களக் கும்பல், எல்லாமே திரண்டு வந்து உடன்படிக்கையையும் இந்தியாவின் தலையீட்டையும் எதிர்த்தன

உடன்படிக்கை கையெழுத்தாகி சிறீலங்கா இராணுவ மரியாதையை ராஜீவ காந்தி ஏற்று நடந்தபோது ரோகணவிஜிதமுனி என்ற இராணுவவீரன் தனது துப்பாக்கியால் ராஜீவ காந்தியின் தலையில் அடித்தான். ராஜீவகாந்தி அத்தாக்குதலிருந்து தப்பிக்கொண்டாராயினும் ஜே.ஆர்.ஜெயவர்த்தனாவின் உளமனம் இந்த இராணுவ வீரனின் செயலைச் சரியானதென்றே ஏற்றுக் கொண்டது. அவனுக்கு sun stroke ஏற்பட்டிருக்கக் கூடுமென்றுதான் ஜே.ஆர். ஜெயவர்த்தனா முதலில் திருவாய் மலர்ந்தார். துணிந்து நின்று ஒரு சாதாரண சிப்பாயின் கொடிய செயலை விமர்சிக்கக்கூட ஜே.ஆர். ஜெயவர்த்தனாவுக்குத் துணிவு இருக்கவில்லை. அததுணைதூரம் சிங்கள பௌத்த பேரினவாதத்திற்கு அவர் பயந்தார். அல்லது அக்கொள்கையிலேயேதான் தனது எதிர்கால அரசியல் வெற்றிகள் தங்கி யிருக்கின்றது என்று நம்பினார். சிறையிலே அடைக்கப்பட்ட இந்தச் சிப்பாய் தேசியவீரனாகப் போற்றப் பட்டு தண்டனைக்காலத்துக்கு முன்னேயே சிறீலங்கா அரசால் விடுவிக்கப்பட்டான். இந்த ஒன்றே இலங்கை, இந்திய உடன் படிக்கையின் அர்த்தமற்ற தன்மைக்கும் இந்தியாவின் மீது இலங்கை அரசு வைத்திருந்த மதிப்புக்கும் ஒரு வெளிப் படையான சான்றாகும்.



**ரோகன விஜிதமுனி**

வடக்கு, கிழக்கு மாகாணங்களை ஒன்றிணைத்த ஒரு மாகாணசபை, ஒரு முதலமைச்சரின் கீழ் அமைக்கப்படும் என உடன்படிக்கை உறுதியுரைத்தது. ஆனால், 1988.12.31இற்கு இடையில் கிழக்கு மாகாண வாக்காளரிடமிருந்து எடுக்கப்படும் பொதுமக்கள் வாக்கெடுப்பு மூலம் வட மாகாணமும் கிழக்கு மாகாணமும் இணைந்திருப்பதா? பிரிந்து போய் இரண்டு மாகாணசபைகள் ஆவதா? என்று தீர்மானம் எடுக்கப்படும் என்ற வரைமுறையையும் உடன்படிக்கை விதித்தது. தமிழர் தாயகத்தின் நிலையான நிரந்தரமான இணைப்புக்கு ஜே.ஆர்.ஜெயவர்த்தனா வைத்த தந்திரமான ஆப்புத்தான் இந்தக் கட்டுப்பாடு. விடுதலைப்போராட்டத்தில் பல ஆயிரக்கணக்கான உயிர் உடைமை வாழ்வியல் இழப்புக்களை எதிர்கொண்ட தமிழர்கள் இந்த நச்சுத திட்டத்தை எதிர்த்ததில் வியப்பென்ன இருக்கிறது

இந்த உடன்படிக்கையைச் சிங்களப் பேரினவாதமும் எதிர்க்கத்தான் செய்தது. ஆனால், முற்றிலும் மாறுபட்ட இன்னொரு கோணத்திலிருந்து வடக்கும் கிழக்கும் இணைந்த மாகாணசபை இருக்கக்கூடாது என்பதுதான் சிங்களப் பேரினவாதத்தின் வாதமாக இருந்தது.

இந்த இணைப்புப் பற்றிய சிங்களவர் மனப்பாங்கு எப்படி இருந்தது என்பதை, அவர்களது எதிர்ப்பு நன்கு விளக்கியது. அவர்களைத் திருப்திப்படுத்த ஜே.ஆர் ஜெயவர்த்தனா என்ன செய்தார் என்பதிலே அவரது ஏமாற்றுத்தனம் நன்கு விளங்கும். 1987 ஆகஸ்ட் மாதம் 6ஆம் நாள், சிங்கள மக்களுக்கு ஜே.ஆர் ஜெயவர்த்தனா பின்வருமாறு உரையாற்றினார். "பிரிவினை கேட்போரை இந்தியாவிலிருந்து வெளியேற்ற இந்தியா இணங்குகிறது. பயங்கரவாதிகளை ஆதரித்துப் பரப்புரை செய்பவோரையும் பயங்கரவாதத்தைப் பேசி அதைச் செய்பவோரையும் இந்தியா தனது மண்ணிலிருந்து வெளியேற்றும் சிறீலங்காவோடு ஆயுதமேந்தி மோத இந்தியாவிடமிருந்து ஆயுதங்கள், வெடிமருந்துகளோடு பயங்கரவாதிகள் வருவதைத் தடுக்க, எங்கள் கடற்கரையோடு சேர்ந்து ஒரு கண்காணிப்பு வலயத்தை உருவாக்கவும் துணையாகச் செயற்படவும் இந்தியா இணங்கியிருக்கிறது வடக்கு கிழக்கு சட்ட ஒழுங்கைப் பேணவும் பயங்கரவாதிகள் சமாதானத்துக்கு வரவும், ஆயுதம் சுமந்து திரியாமல் பார்க்கவும் எனக்கு உதவுவதாகவும் இந்தியா இணங்குகிறது. இதனாற்றான் இந்தியப் படையை இங்கு நான் வரவழைத்தேன் இந்தியப்படை எனது கண்காணிப்பின் கீழேதான் இயங்கும். உங்கள் வீடுகளுக்குத் திரும்பிப்போய் விடுங்கள் என்று நான் சொன்னால் அவர்கள் போய்விடுவார்கள்".

இந்தியாவுக்கும் இந்தியப்படைக்கும் உடன்படிக்கைக்கும் ஜே.ஆர். ஜெயவர்த்தனா எவ்வளவு மதிப்புக் கொடுத்தார் என்பதை அவரது பேச்சு நன்கு புலப்படுத்தும். எத்தகைய ஒப்பந்தங்களை இந்திய அரசு சிறீலங்காவோடு செய்திருந்தது என்பதை ஜே.ஆர் ஜெயவர்த்தனாவின் வார்த்தைகள் மிகத்தெளிவாகச் சொல்லின. வடக்கு கிழக்கு மாகாண இணைப்பைப்பற்றி ஜே.ஆர் ஜெயவர்த்தனா சிங்கள மக்களுக்குச் சொன்ன வார்த்தைகள் இலங்கை-இந்திய உடன்படிக்கை தமிழர்களின் விடுதலை அவாவைத் தீர்க்கப்போவதில்லை என்பதை வெள்ளிடை மலையாகக் காட்டியது.

"இந்த இணைப்புத் தற்காலிகமானதே. நிரந்தரமாக இருக்கப்போவதில்லை இணைப்புக்கெதிராக ஒரு வாக்கு விழுந்தாலும் பொதுமக்கள் வாக்கெடுப்பின் மூலம் கிழக்கு வடக்கிலிருந்து பிரியும். எனக்கு வாக்கெடுப்பின் முடிவு பற்றி எந்தப்பயமும் கிடையாது. இந்த இணைப்புக்கெதிரானவர்களை நான் கேட்கவிரும்புவது என்னவென்றால், வடக்கு கிழக்கு மாகாணங்கள் தொடர்ந்து இணைந்திருக்கக்கூடாது என்பதற்காகச் சேர்ந்து வேலைசெய்ய என்னோடு வாருங்கள்".

தமிழர் தாயகம் தொடர்ந்து இணைந்திருந்தால் இலங்கைத்தீவை, தனிச் சிங்கள நாடாக்கும் தமது பேரவா கனவாகும் என்பதையும் அதற்கான முட்டுக்கட்டைகளையும் எவ்விதமும் போட்டே ஆக வேண்டும் என்பதையும் சிங்கள அரசு நன்கு புரிந்திருந்தும், இந்திய அரசை ஏமாற்றியது. இந்திய அரசும் தனது பிராந்திய நலன்களுக்காக, தமிழர்களை ஏமாற்றத் துணிந்தது. உடன்படிக்கையின் 2.11 பிரிவின்படி பயங்கரவாதத் தடைச்சட்டத்தின் கீழ்

சிறையிலிருப்பவர்கள், போராளிகள், குறித்த சட்டங்களின் கீழ் குற்றம் சாட்டப்பட்டிருப்பவர்கள ஆகியோருக்கு சிறீலங்கா அதிபர் பொது மன்னிப்பு அளிக்கவேண்டும். ஆயுதம் ஏந்திய தமிழ் இளைஞர்கள் தேசிய வாழ்வுக்குத் திரும்பும்படியாக மீள் வாழ்வு அளிக்கும்படியாக தனி முயற்சிகளை சிறீலங்கா அரசு செய்யவேண்டும். இம் முயற்சிகளுக்கு இந்திய அரசு உதவியளிக்க வேண்டும்.

இதிலே எந்தவொரு வாக்குறுதியையும் சிறீலங்கா அரசு நிறைவேற்றவில்லை. இந்திய அரசும் உதவவில்லை. இலங்கை அரசைத் தட்டிக் கேட்கவுமில்லை இலங்கை - இந்திய உடன்படிக்கையில் தமிழர்கள் பங்காளி களாகவும் இல்லை. உடன்படிக்கையின் பின்னர் த.வி.கூட்டணியும் தமிழீழ விடுதலைப்புலிகள் தவிர்ந்த ஏனைய போராளிக் குழுக்களும் தமது அரசியல் நலன்களுக்காக அதை ஏற்று ஒத்தூதின.

### தமிழர் நலன்கருதி உடன்படிக்கையை எதிர்த்த புலிகள்

தமிழர்களின் நலன்களை அந்த உடன்படிக்கை முற்றாகவே புறக்கணிப்பதை உணர்ந்த தமிழீழ விடுதலைப்புலிகளின் தலைவர் வே.பிரபாகரன் அவர்கள் அதை எதிர்த்தார்; ஏற்றுக் கையொப்பமிட மறுத்தார்; சிறிலங்கா அரசு உடன்படிக்கையில் ஏற்றுக்கொண்ட எந்தவொரு அரைகுறைத் தீர்மானத்தைத்தானும் நிறைவேற்ற முயலாது. அவ்வாறு நிறைவேற்ற, சிங்களப் பேரினவாதமும் பௌத்த மதமும் உறுதியாக விடப்போவதில்லை என்று இந்திய அரசுக்கு எடுத்துரைத்தார். பேச்சுவார்த்தைக்கென தமிழீழத்திலிருந்து இந்தியாவுக்கு அழைத்துச் செல்லப்பட்ட புலிகளின் தலைவர் கறுப்புப் பூனைகள் புடைசூழ நட்சத்திர விடுதியிலே வைக்கப்பட்டார்; வற்புறுத்தப்பட்டார் தமிழர்களின் எதிர்காலத்திற்கு வேட்டுவைக்கும் இந்த உடன்படிக்கைக்கு ஒப்புதல் அளிப்பதைவிட 'தற்கொலை செய்து விடலாம்' என்றுகூட எண்ணுவதாக தமக்கு வே.பிரபாகரன் கூறியதாக வைகோ அவர்கள அப்போது பேசியிருந்தார். இருந்தாலும் இந்தியாவைப் பகைத்துக்கொள்ள தமிழீழ விடுதலைப்புலிகள் விரும்பவில்லை **ராஜீவ்காந்தி பல்வேறு வாக்குறுதிகளை அளித்ததின்பேரில் இந்திய நல்லெண்ணதிற்கு இடங்கொடுக்க தமிழீழ மக்கள் சார்பில் விடுதலைப்புலிகள் முடிவெடுத்தனர். சிங்கள ஆட்சியாளரின் ஏமாற்றுக் குணத்தை இந்திய அரசு உணர்ந்துகொள்ள ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தக் கருதினர்.**

### பிரபாகரனின் வரலாற்றுச் சிறப்புமிக்க சுதுமலைப் பேச்சு

தமிழ் மக்கள் பாதுகாப்புக்கு இந்திய அரசு உறுதியளித்ததால் போர நிறுத்தத்துக்கும் ஆயுதக் கையளிப்புக்கும் தமிழீழ விடுதலைப்புலிகள் ஒப்புக் கொண்டனர். 1987.08.04ஆம் நாள் சுதுமலையில் தன் முன்னே திரண்டிருந்த பல இலட்சக்கணக்கான தமிழ் மக்களின் முன்னே நடந்த கூட்டத்தில் இந்திய



**தலைவர் அவர்களின் பேச்சைக் கேட்கத் திரண்ட மக்களின் ஒரு பகுதியினர்**

அமைதிப் படைகளின் தளபதிகள் கேட்கக் கூடியதாக வே. பிரபாகரன் பேசினார். தேசிய சர்வதேச ஊடகவியலாளர்கள் நிறைந்திருந்தனர். அந்தப் பேச்சு ஒரு தனி மனிதனின் உரையல்ல தமிழீழ ஆன்மாவின் பேச்சு என்பதை, அதைத் தொடர்ந்து நிகழ்ந்த போர்கள், அவலங்களும் உலகுக்கு மெய்ப்பித்தன "எங்களுடைய விடுதலைப் போராட்டம் இன்று பெரிய திருப்பத்துக்குள்ளாகி






இருக்கிறது. இந்தத் திருப்பங்கள் எங்களுக்குச் சாதகமாக அமையுமா என்பதை நாம் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்"

"இந்த உடன்படிக்கையின் மூலம் தமிழர்களின் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத்தீர்வு வரும் என்று நான் நினைக்கவில்லை. சிங்கள இனவாதப் பேய்கள் இந்த உடன்படிக்கையை விழுங்கும் காலம் வெகுதொலைவில் இல்லை. தமிழீழ மக்களின் பிரச்சினைகளுக்கான நிரந்தரத் தீர்வை, தமிழீழத் தனியரசு மட்டுமே தரமுடியும் என்பதுதான் எனது கணிப்பும் மாறாத நம்பிக்கையுமாகும். தமிழீழம் பெறுவதற்கான போரை நான் தொடர்ந்து நடத்துவேன் என்பதை ஒருவித சந்தேக நிழலுமின்றி உங்களுக்குத் தெளிவாக்க விரும்புகின்றேன்"

"போராட்டவடிவங்கள் மாறலாம். ஆனால், எமது போராட்டத்தின் நோக்கம் மாறப்போவதில்லை" திரு.பிரபாகரன் அவர்கள் ஆயுதக் கையளிப்பைப் பற்றிப் பேசும்போது, தமிழ் மக்களின் எதிர்காலப் பாதுகாப்பு இந்தியாவின் கைகளிலே அளிக்கப்படுகிறது என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டார்

## இந்தியாவின் முயற்சிக்கு புலிகள் கொடுத்த வாய்ப்பும் ஜெயவர்த்தனாவின் உடன்படிக்கை மீறலும்

29.07.1987 இல், சமாதானமும் இயல்பு நிலையும் ஏற்படுத்துவதற்காகவென இந்திய, இலங்கை உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்டது. இந்த உடன்படிக்கை முரண்பாட்டிலே சம்பந்தப்பட்ட பகுதியினரிடையே நடைபெற்றதல்ல. இருந்த போதும், இந்தியாவினுடைய பிராந்தியப் பாதுகாப்பு நலன்களை உறுதி செய்யும் அதேவேளையில், தமிழர்களின் தலைவிதியையும் தீர்மானித்தது. உண்மையில் சிறீலங்காத் தமிழர்களைப் பற்றிச் செய்யப்படுகின்ற முதலாவது உடன்படிக்கை இதுவல்ல. இவ்வுடன்படிக்கையே கடைசியாகவும் இருக்கப்போவதில்லை. இவ்வுடன்படிக்கைகள் தமிழர்களின் பிரதிநிதிகளையோ தலைவர்களையோ கலந்து அவர்களின் ஒப்புதல்களைப் பெற்றுக் கொள்ளாமலே செய்யப்பட்டு, அவர்களின் தலையிலே சுமத்தப்படுகின்றன. எந்தவொரு உடன்படிக்கையும் தமிழர்கள் அவாவை நிறைவேற்றவில்லை. துயரத்தையும் வேதனையையுமே விளைவாகத் தந்தன.

இந்திய-இலங்கை உடன்படிக்கை கூட இத்தகையதே. தமிழர்களின் தலையிலே பாறாங்கல்லாக வைக்கப்பட்ட உடன்படிக்கையே இது. இருந்தாலும் தமிழர்கள் விட்டுக்கொடுத்தனர். ஒத்துழைக்க முன்வந்தனர். உடன்படிக்கை வடக்கும், கிழக்கும் தமிழர்களின் தாயக நிலம் என ஒப்புக்கொண்டபோதும் உடன்படிக்கை கைச்சாத்தான அடுத்த நொடியிலிருந்தே ஜே.ஆர்.ஜெயவர்த்தனா



போர்நிறுத்த வாய்ப்பைப் பயன்படுத்தி, வடக்கு கிழக்கில் சிங்களக் குடியேற்றத்தைத் விரைவுப்படுத்தத் தொடங்கினார்.

போர் நடைபெற்ற காலத்தில் போராளிகளின் ஆயுத எதிர்ப்பால முடியாமலிருந்த குடியேற்ற முயற்சியை. ஜே.ஆர்.ஜெயவர்த்தனா கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தி, கிழக்கில் பெருத்த வேகத்தோடும், முனைப்போடும் செயற்படுத்தினார். தமிழர்களின் மீட்பராக வந்த இந்தியாவிடம் தமிழர்கள் முறையிட்டுப் பார்த்தனர். இந்தியா கண்களை இறுக மூடிக்கொண்டது

வடக்கு, கிழக்கு மாகாணங்களில் பூகோளரீதியான தொடர்பைத் துண்டிக்கும் இந்தச் சிங்களக் குடியேற்றங்கள் பற்றி தமிழர்களின் எதிர்ப்புகள் எதுவித பயனையும் கொடுக்கவில்லை. சிங்கள ஆயுதப் படைகள் தமது முகாமுகளில் இருப்பர் என்று உடன்படிக்கை கூறியது ஆனால், ஆயுதம் தாங்கிய ஊர்காவலர்களும் சிறப்புக் கொமாண்டோக்களும் தமிழ்ப் பகுதிகளிலே திரிந்தனர் சட்டவிரோதமாக அரச ஆதரவுடன் நடைபெற்ற சிங்களக் குடியேற்றங்களுக்குப் பாதுகாப்பு அளித்தனர். ஆயுதத்தைக் கையளித்துவிட்ட வெறுங்கையர்களாக தமிழர்களின் நலன்களை வெல்லமுடியாத நிலையிருந்த விடுதலைப்புலிகள், அதற்கான உறுதி உரைகளை அள்ளி வழங்கி அப்பொறுப்புக்களை தமது கைகளில் தாங்கிக் கொண்ட இந்தியாவிடம் முறையிட்டனர் அவர்களின் முறையீடு புறக்குடத்து நீராகியது.

ஆயுதக்களைவு என்ற உடன்படிக்கையின் பிரிவின்படி, விடுதலைப்புலிகள் இந்திய அமைதிப்படையின் பார்வையில், ஜே.ஆரின் பிரதிநிதியான சேபால ஆட்டிக்கலவிடம் ஆயுதங்களைக் கையளித்தனர் ஆனால், முகாம்களுக்குள் போகவேண்டிய அரசின பொலிசாரும், படையினரும் ஆயுதங்களோடு வெளியே திரிந்தனர். உடன்படிக்கைக்கு கைச்சாத்திட்டவரான ஒப்புதலை அளிக்க மறுத்த விடுதலைப் புலிகளை ஒடுக்கவும் ஒழிக்கவும் நினைத்த "றோ" அமைப்பு, தமிழர் நலன்களைத் தமது சுயநலத்துக்காகக் கைவிட்ட ஏனைய தமிழ்க் குழுக்களின் கைகளிலே பாரிய ஆயுதங்களைக் கொடுத்து, தெருவிலே தம்மோடு நிறுத்திக் கொண்டது. வெறுங்கையராக நின்ற விடுதலைப்புலிகளின் மீதும் நியாயமான விடுதலையை நேசிக்கும் தமிழ் மக்களின் மீதும் இந்தக் குழுக்கள் சிறிலங்காவினதும் இந்திய அமைதிப் படைகளினதும் ஆசீர்வாதத்தோடு தமது வேட்டையைத் தொடங்கின விடுதலைப்புலி உறுப்பினர்கள், ஆதரவாளர்கள் நடுத்தெருவில் சுட்டுக் கொல்லப்படுவதும், சித்திரவதைக் கொள்ளைக்காரர்களின் காட்டு நீதி, தமிழீழத் தெருவெங்கும் ஆரம்பமாகியது இவை உடன்படிக்கையின் உயிர்ப்புக்கும், நேர்மைக்கும் நோக்கத்துக்கும் ஊறுவிளைவிக்கின்றன என்பதை பலமுறை சுட்டிக்காட்டியபோதிலும் அவை பாவம் சாத்தானின் முன் படிக்கப்பட்ட வேதமாகப் பயனொழிந்தன.

உடன்படிக்கையில் உத்தரவாதப்படுத்தப்பட்ட இடைக்கால மாகாணசபை சிறிலங்கா அரசினால் வேண்டுமென்றே இழுத்தடிக்கப்பட்டது முதலமைச்சர

பதவிக்காக புலிகளினால் முன்மொழியப்பட்ட பத்மநாதனின் பெயர் ஜே.ஆரினால் மறுதலிக்கப்பட்டது. அவர் வழக்குகளில் தொடர்புபட்டிருந்தார் என்பதே மறுப்புக்காகச் சொல்லப்பட்ட காரணம் ஆனால், அவை அரசியல் சார்ந்த வழக்குகளே உடன்படிக்கையில் சொல்லப்பட்ட பொதுமன்னிப்பு விதி ஜே.ஆரால் மறுக்கப்பட்டபோது இந்திய அரசுகையாலாகாமற் பார்த்துக் கொண்டிருந்தது மட்டுமன்றி, புலிகள் முன்வைத்த காசியானந்தனின் பெயரை, தான் விரும்பில்லை என்று மறுஆப்பு வைத்தது உண்மையில் இந்த உடன்படிக்கையை அதன் நிபந்தனைகளின்படி நிறைவேற்றுவது சிறிலங்கா அதிபரின் நோக்கமல்ல. தமிழர்களின் நலனுக்காகப் பேசிவந்த இந்திய அரசினை தமிழர்களுக்கெதிராகத் திருப்பிவிடுவது ஒரு நோக்கம். இந்த வேளையைப் பயன்படுத்தி வடக்கில் நிறைந்து வைக்கப்பட்டிருந்த சிறிலங்கா இராணுவத்தை, தென்னிலங்கைக்குத் திருப்பி அழைத்துப் பயன்படுத்தி, தெற்கிலே வலிமை பெற்று வந்த ஜே.வி.பி. கிளர்ச்சியாளர்களை ஒடுக்குவது இன்னொரு நோக்கம். இந்த இரண்டு திட்டங்களிலுமே ஜே.ஆர் வெற்றியடைய இந்திய இராசதந்திரத்தின் படுகேவலமான தோல்வியின் விலையை தமிழர்கள் செலுத்த நேரிட்டதே வரலாறு சொல்லும் துயர்நிறைந்த பாடம். ஆயுதக் கையளிப்பின் பின்னாகூட, தமிழப் போராளிகளை ஜே.ஆர். பயங்கரவாதிகள் என்றே அழைத்தார். உடன்படிக்கையின் போதும் அதன்பிறகான பத்திரிகையாளர் மாநாட்டிலும் அதைத் தொடர்ந்து நாட்டு மக்களுக்கான உரையிலும் இந்தியப் பிரதிநிதிகளை வைத்துக்கொண்டே விடுதலைப்புலிகளை "பயங்கரவாதிகள்" என்று குறிப்பிட ஜே.ஆர் மறக்கவில்லை. இந்த உடன்படிக்கையை, சிங்கள மக்களைக் காப்பாற்றும் உடன்படிக்கையாக ஜே.ஆர் கருதினாரே அன்றி, தமிழ் மக்களுடைய பேரவாவை அடையாளம் கண்டு அவர்களுக்கு நீதிவழங்கும் உடன்படிக்கையாக அவர் கருதவில்லை

87 யூலை 29ஆம் நாளைய, தொலைக்காட்சி உரையில் ஜே.ஆர் வெளிப்படையாகவே கூறினார் அந்த உரையின் உள்நோக்கம் இந்தியாவுக்குப் புரியாததுதான் விந்தை "2500ஆண்டுகளுக்கு முன் இளவரசர் விசயனின் இலங்கை வருகைக்குப் பின், இந்தியத் தலைவரின் (ராஜீவ்) இந்த வருகை முக்கியம் வாய்ந்தது இளவரசர் விசயன் சிங்கள இனத்தைத் தோற்றுவித்தார் ஆனால், பிரதமர் ராஜீவ்காந்தி கையொப்பமிட்ட இந்த உடன்படிக்கை சிங்கள இனத்துக்கு ஒரு மறுபிறப்பைக் கொடுக்கும் என்று நான் நினைக்கின்றேன். ஏனென்றால், சிறிலங்காவில் குறிப்பாக வடகிழக்கு மாகாணங்களின் சண்டைகளால் எங்களுக்கிடையிலான (சிங்களவர்) புரிந்துணர்வு வன்முறையால் மற்றும் மனிதக் கொடுமைகளில் அட்டூழியங்களால் அழிந்து போயுள்ளோம். இந்த உடன்படிக்கை சிங்கள இனத்துக்குக் கிடைத்த வரம்" என ஜே.ஆர் பேசியது முற்றிலும் உண்மை. இதனை இன்னொரு இடத்திலே அவர் சுட்டிக்காட்டத் தவறவில்லை

"இந்திய அமைதிகாக்கும் படை வராதிருந்தால் நாங்கள் புலிகளோடு சண்டை செய்துகொண்டிருக்க நேர்ந்திருக்கும் நாங்கள் சம்பள அதிகரிப்புக்குச் செலவு செய்யும் தொகையைவிட மேலான தொகையைச் சண்டைக்குச் செலவுசெய்ய நேரிட்டிருக்கும்" என்று ஜே.ஆர் பேசியதாக 87.12.27ஆம நாளைய

பி.ரிஜ செய்தி சொல்கிறது. இன்னொரு இடத்தில் பேசும்போது, இந்தியப்படைகளை நாம் அழைததிராவிட்டால், இந்த நாட்டை தமிழர்களுக்குத் தாரைவார்க்க வேண்டி வந்திருக்கும் எனறும ஜே.ஆர இனவாதத்தைககக்கததவறவில்லை. ஜே.ஆர உட்பட எந்தவொரு சிங்களத தலைவரும் ஒருகாலமும் தமிழர்களை. சிறிலங்காவின் உரிமையுள்ள குடிமக்களாகக் கருதவேயில்லை.

கனடிய பததிரிகைகத செவ்வி யளித்தபோது கனடிய முறைப்படி உங்கள் பிரச்சனைக்கு ஏன் தீர்வு காணமுடியாது எனச் செய்தியாளர் கேட்டார். அப்போது ஜே.ஆர் அவருக்குத் திருப்பிச் சென்னார், .கனடாவுக்கு தங்கள் பிரச்சனையைத் தீர்ப்பது வெகுசுலபம், ஏனென்றால், உங்கள் மக்கள் அனைவருமே கனடியர்கள். ஜே.ஆரின் இந்தப் பதில் தமிழர்களை இலங்கையராக அவர் கருதவில்லை என்பதையே காட்டுகின்றது. (சிங்களத் தலைவர்களுடைய இந்த வெறியை நன்கு



## பிரெயின் செனிவிரத்தினா

இனங் கண்ட பிரெயின் செனிவிரத்தின என்ற சிங்கள அறிவியலாளர்) இலங்கையின் பிரச்சினை என்பது தமிழ்ப் பயங்கரவாதமல்ல சிங்களத தீவிரவாதமே. என்று தனது கட்டுரையிலே எழுதினார்.அவரே பிறிதொரு இடத்தில் வருத்தத்தோடு "சிறிலங்காவெனும் பௌத்த நாட்டில தமிழராக இருக்கும் பட்சத்தில், அவரைக கொல்லுவது அனுமதிக்கப்படக்கூடியதே என்ற கருத்து பரவி வருவது வியப்புக்குரியதாக இருக்கினறது. தமிழர்கள தெற்கு ஆபிரிக்காவின் கறுபபு நீக்ரோக்கள் நடததப்படுவதைப் போல மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்டு கேவலப் படுத்தப்படுகிறார்கள்" என்றார்.

பிரெயின செனிவிரத்தினாவின் கருத்து மேலெழுந்த வாரியானதல்ல சிங்களப் பேரினவாதிகளின் வேதபபுத் தகமான மகாவம்சமகூட இதனையே கூறுகின்றது போர வெற்றியின் பின இலட்சக் கணக்கான மனிதர் (தமிழர்களைக் கொனறதற்காக துயருற்றிருந்த துட்டகை முனுவைத் தேற்ற வந்த 500 புத்த பிக்குகளும், "பௌத்த மதத்தை ஏற்றுப பேணாத தமிழர்கள் விலங்குகளைவிடக் கேவலமானவர்கள். அவர்களைக் கொல்வது கொலையாகாது" என்று கூறித் தேற்றுவதாக மகாவம்சம் கூறுகின்றது. "இலங்கையில் வனவிலங்குகளுக்குக்கூடச் சரணாலயம் உண்டு. தமிழர்கள் மதிப்புடன் வாழ

அதுகூடக்கிடைபாது." என்று பேசினார் வை.கோபாலசாமி. உடன்படிக்கையின் கீழான எந்தவொரு விடயமும் நிறைவேற்றப்படாத நிலையில், உயிரிழப்புக்கு ஆளானபோதும் விடுதலைப்புலிகளோ, தமிழ் மக்களோ உணர்ச்சிவசப்பட்டு ஆயுதத்தைத் தூக்கவில்லை. இடைக்கால மாகாணசபை அமைப்பதிலுள்ள இழுத்தடிப்பை, சிங்களக் குடியேற்றத்தை, பொலிஸ் ஊர்காவற்படை ஆயுதம் தாங்கிய தமிழ்க் குழுக்களின் அட்டூழியத்தை இந்திய அரசுக்குத் தெரிவித்து, அதைத் தடுத்து நிறுத்துமாறு கோரும் அமைதி வழியான போராட்டத்தைச் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டனர்.

விடுதலைப்புலி திலீபன் 15.09.1987இல், யாழ்ப்பாண நல்லூர்க் கந்தன்கோவில் முன்றலிலே, நீரும் அருந்தாது சாகும்வரையான உண்ணா நோன்பைத் தொடங்கினார். இந்திய இலங்கை உடன்படிக்கையை உள்ளவாறு




நிறைவேற்றும்படியும், விடுதலைப்புலிகட்கு இந்திய அரசு வழங்கிய உறுதிமொழியைச் செவ்வனே நிறைவேற்றும்படியும் கோரிக்கைவிடுத்து அவரது உண்ணா நோன்பு தொடங்கியது. மக்கள் வெள்ளம் அவர் முன்னே திரண்டது. பலவேறு இடங்களில் அவரின் கோரிக்கையை ஆதரித்து வலுச் சேர்க்கும் வகையில் உண்ணா நோன்புப்போர் விரிந்தது. முல்லையில் சிங்களப்படைகளால் தமது நிலங்களில் இருந்து விரட்டியடிக்கப்பட்ட கொக்கிளாய் மக்கள் மறியற்போர் செய்தனர். ஆனால், இந்திய அரசு அசைந்து கொடுக்கவில்லை. மாறாக சிறிலங்காவிற்கான இந்தியத் தூதுவர் டிக்சிற் திலீபனது போராட்டத்தை இழிவு செய்வதுபோலப் பேசி, தமிழர்களின் ஆத்மாவை பேரும் காயப்படுத்தினார். திலீபன் 26.09.1987 இல் உயிர்துறந்தார்.

இந்தச்சாவு தமிழ் மக்களின் மனதிலே பெரும் அலையைத் தோற்றுவித்தது. இலங்கை-இந்திய உடன்படிக்கையின் நேர்மையிலும், இந்திய அரசின் தலைமீட்டில் உள்ள நேர்மையிலும், இந்திய அமைதிப்படையின் நேர்மையிலும் தமிழ் மக்களுக்குப் பெருத்த ஐயம் நிலவியதால், விடுதலைப் புலிகளின் "பின்னே மக்கள் அணிதிரண்டனர்" உணர்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடத் தொடங்கியதும், இந்திய அரசு மீண்டும் புலிகளுடன் 28.09.87 இல், ஒரு பொருததனை செயது கொண்டது. இதன்படி இடைக்கால மாகாணசபையைத் தாமதமின்றி அமைகக ஒப்புக்கொண்டது. இந்த மாகாணசபையின் 12உறுப்பினர்களில் முதலமைசசர் உட்பட 7பேரை விடுதலைப்புலிகளுக்கு வழங்க உடன்பட்டது. எனினும் புலிகளின பட்டியலில் முதலமைசசர் பதவிககுக் குறித்துரைக்கப்பட்ட பத்மநாதனின் பெயரை ஜே.ஆர் ஜெயவர்த்தனா ஏற்க மறுத்தார். பத்மநாதன் அந்த வேளையிலே போராட்ட


[illegible]


[illegible]


[illegible]


[illegible]


[illegible]


லெப். பழனி


[illegible]


[illegible]


லெப். நவக்குமார்


[illegible]


[illegible]


லெப். ஆனந்தக்குமார்

# பன்னிரு வேங்கைகள்

காரணங்களுக்காகக் குற்றஞ்சாட்டப்பட்ட பல தமிழர்களில் ஒருவராக இருந்தார் உடன்படிக்கையின் 2.11பிரிவு வெறும் ஏட்டு எழுத்தாக இருந்தது. அரசியற் கைதிகளை. சிங்கள அரசு ஒப்பந்தத்தின்படி விடுதலை செய்யவில்லை ஆனால். சிறை.வழக்கு என்ற காரணம் காட்டி பத்மநாதனின் பெயரை ஏறக மறுத்தது. பத்மநாதன் பின்னர் சிங்கள ஆட்சியாளரால் பட்டக்களப்பு அரச அதிபராகப் பணியமர்த்தப்பட்டு அண்மையில்தான ஓய்வு பெற்றார் என்பதுகூர்ந்து நோக்கவேண்டியதொன்றாகும்.

## பன்னிரு வேங்கைகளின் வீரச்சாவு

பொதுமன்னிப்பு வழங்கப்பட்டிருந்த நிலையில். காற்புறாவிலே கடலில சென்ற விடுதலைப்புலி உறுப்பினர்களில 17பேரை. சிறிலங்கா கடற்படை அவர்கள் ஆயுதம் தாங்கியிராத போது கைதுசெய்து. பலாலி முகாமுக்குக் கொண்டு வந்து அடைத்து வைத்தது விடுதலைப்புலிகளின் மூத்த உறுப்பினர்களான புலேந்திரன. குமரப்பா போன்றோரும் இந்த 17பேரிலே அடங்குவர். விடுதலைப்புலிகள் இந்தியாவிடம் முறையிட்டனர். ஆனால். இந்தியா எதுவும் பேசாதிருந்த நிலையில. உடன்படிக்கையை மீறி. தமிழ்ப்புலிகளை. கொழும்புக்குக் கொண்டுசெல்ல சிறிலங்கா அரசு முயற்சி செய்தது.

இதன் விளைவாக 17பேரும் சயனைட் அருந்த. 12பேர் சாவைத் தழுவிக் கொண்டனர் அதனைத் தொடர்ந்து தமிழ் நிலத்திலே ஏற்பட்ட கொதிப்பும் ஆற்றமுடியாத உணர்வலைகளுந்தான இந்திய அமைதிப்படைக்கெதிரான போராக வெடித்தது விடுதலைப்புலிகள் முதலில் இந்தியப் படைகளைத் தாக்கவில்லை. உடன்படிக்கையை மீறிய இலங்கை அரசின் திட்டமிட்ட சிங்களக் குடியேற்ற முயற்சிகளை எதிர்த்தே கிழக்கு மாகாணத்தில் விடுதலைப்புலிகள் தாக்குதலைத் தொடுத்தனர் 09.10.87இல். சிறிலங்கா அரசு விடுதலைப்புலிகளைத் தடை செய்யும் அறிவிப்பை வெளியிட. அதேநாள் நள்ளிரவுக்குப் பின். இந்தியப்படை திடீரென விடுதலைப்புலிகளுக்கெதிரான தனது இராணுவ நடவடிக்கையைத் தொடங்கியது.

## தவிர்க்கமுடியாத நிலையில்
## இந்தியப் படைகள் மீது புலிகளின் தாக்குதல்

இந்தியாவோடு போர் ஒன்றைத் தொடுப்பதற்குப் புலிகள் விரும்பவில்லை. இந்திய அரசின தெளிவற்ற அரசியற் கொள்கையினால் ஈழத்தமிழ் மக்கள் மீண்டும் ஒருமுறை ஆயுதம் தாங்க. கட்டாயப்படுத்தப்பட்டனர் 09.10.87 நள்ளிரவு "நிதர்சனம்" என்னும் புலிகளின் ஒலிபரப்புக் கருவிகளை இந்தியப்படை கைப்பற்றியது 10.10.87இல் முரசொலி. ஈழமுரசு என்னும் பத்திரிகைப் பணிமனைகள் இந்தியப்படையினரால் குண்டு வைத்துத் தகர்க்கப்பட்டன. இதனைத் தொடர்ந்துதான் 10.10.87 பி.ப.2 மணியளவில். விடுதலைப்புலிகள் இந்திய அமைதிப்படையை எதிர்க்கத்தொடங்கினர். இந்திய அரசு விடுதலைப்புலிகளை ஒடுக்குவதிலும் அவர்கள் ஆயுதங்களைக் களைவதிலும் காட்டிய வேகத்தை.





கிருஸ்ணையர், வாஜ்பாய், வி.பி.சிங், சந்திரசேகர், எம்.ஜி.ஆர், ஆவடி அருணா, நெடுமாறன், என்.டி.ராமராவ், வை.கோபாலசாமி, கருணாநிதி, ஜெயலலிதா, வீரமணி.

உடன்படிக்கையை நிறைவேற்றுவதற்கான அழுத்தத்தைச் சிறிலங்கா அரசுமீது செலுத்துவதில் காட்டவில்லை. தனது இரும்புக்கரத்தால் தமிழர்களின் உணர்வுகளைத் திருகி எறியவே முடிவு செய்து, இலட்சக்கணக்கான துருப்புகளைத் திரட்டியது; எறிகணை விமானக்குண்டுவீச்சு மூலம் தமிழீழத்தைக் காயப்படுத்தத் தொடங்கியது.

உடன்படிக்கையின்பேரில் தனக்குக் கிடைத்த அனுகூலங்களைச் சிறிலங்கா அரசு அமைதியாக அறுவடை செய்துகொண்டிருந்தது. இந்திய அமைதிப்படை வந்த பிறகு சிறிலங்கா இராணுவத்தில் ஒருவருக்குக்கூடச் சிறுகாயம் இல்லை; உயிரிழப்பு இல்லை. போர்ச் செலவு குறைந்தது. சிங்களப் பகுதிகளின் அபிவிருத்தி கிடுகிடுவென வளரத் தொடங்கியது. தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றங்கள்



விடுதலைப் புலிகளால் விடுவிக்கப்பட்ட 18 இந்தியப் படையினரில் முதற்றொகுதியினர்



விடுதலைப் புலிகளால் வவுனியாவில் வைத்து விடுவிக்கப்பட்ட இரண்டு இந்தியப் படையில் ஒருவருடன் புலிகள்

அகோரமாய் நடந்தன. இந்தியாவின் செலவிலே இந்தியப்படைகளைக்கொண்டு தமிழர்களுக்கெதிரான போரை சிறிலங்கா நடத்திக்கொண்டு, தெற்கிலே ஜே.வி.பியின் வன்முறைக்கு தான் முகம் கொடுத்துக்கொண்டிருந்தது.

தமிழர் திணிக்கப்பட்ட இந்தியப் போருக்கு விடுதலைப்புலிகள் முகம் கொடுத்த போதும் போர் நிறுத்தம் செய்து அரசியல் பிரச்சினையைப் பேசித்தீர்க்கும்படி பல முறை இந்தியாவை வேண்டினார்கள். தம்மால் கைது செய்யப்பட்ட இந்தியப் படையினரை விடுவித்து, தம் நல்லெண்ணத்தை வெளிப்படுத்தினர். ஆயுதக் களைவைத் தவிர மறுபேச்சில்லை என்ற போக்கில், இந்திய அமைதிப்படை தமிழர் மீதான கொடிய போரை மேலும் மேலும் கூர்மைப்படுத்தியது. மனித நீதி இழந்த எவருமே இந்திய அரசின் இந்த முடிவை ஏற்கவில்லை. சிங்கள ஜெயவர்த்தனாவின் படை "யுத்தியாக" இந்தியா ஏன் இயங்க வேண்டும் என நீதிபதி வி.ஆர். கிருஷ்ணஐயர் ஒரு கட்டுரையினை எழுதினார்.

"இந்தியப்படை புலிகளோடு யுத்த நிறுத்தம் செய்து சிறிலங்கா அதிபரை உடன்படிக்கையை நிறைவேற்றும்படி அழுத்தம் கொடுக்க வேண்டும் இல்லையேல் தங்களது தலைவிதியைத் தாங்களே எழுதும்படி விலகிவிட வேண்டும்" என்று அவர் உறுதிபடக்கூறினார். இந்தியாவின் அன்றைய தலைமை அமைச்சர் வாஜ்பாய் முன்னாள் தலைமை அமைச்சர்களான வி.பி.சிங், வி.எஸ். சந்திரசேகர் முன்னாள் தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். முன்னாள் ஆந்திர முதல்வர் என்.டி.ராமராவ் முன்னாள் பாதுகாப்பு அமைச்சர் ஜோர்ச் பெர்னாண்டஸ் அண்மையில்

மறைந்த முன்னால் தமிழக அமைச்சரும் சட்டபேரவைத்தலைவருமான கா.காளிமுத்து ஆகியோரும் இந்திய அரசின் புலிகள் மீதான நடவடிக்கைகளைக் கடுமையாகச்சாடினர்.

"தமிழீழப் போராளிகள் நிராயுதபாணிகள் ஆக்கப்பட்டால் அடுத்த கணமே இந்தியப்படைகளை விலக்குமாறு சிறிலங்கா அரசு கேட்கும். இதன் பிறகு தமிழர்களில் அக்கறை செலுத்தப்போவது எவர்?" என்று கேள்வி எழுப்பினார் ஆலடி அருணா. வை.கோபாலசாமி, நெடுமாறன், முரசொலிமாறன், கலைஞர் கருணாநிதி, ஜெயலலிதா, வீரமணி போன்ற தமிழகத்தலைவர்கள் எல்லோருமே இந்திய இராணுவத்தின் முறையில்லாப் போரைக்கண்டித்தனர். இந்திய அமைதிப் படை தமிழீழத்தில் நிகழ்த்திய போரின் விளைவு சொல்லும் தரமன்று. உயிரிழப்புக்கள், பாலியல் வல்லுறவு என்று குருதி ஆறு ஓடத் தொடங்கியது. இந்திய அரசு மிகப் பிடிவாதமாக ஆயுதக்களைவு என்ற பெயரில் தமிழர்கள் மீது போரைத் தொடுத்திருந்தாலும் சிங்களப் பேரினவாதத்தினை மனநிறைவடையச் செய்வோ உடன்படிக்கையைச் செயற்படுத்தவோ அவர்களால் முடியவில்லை என்பதே உண்மை.


பிரேமதாசா

அரசுக்குத் துணைபோன சிலரைக் கொண்டு, ஒருபொம்மை மாகாண சபையை உருவாக்குவதில் இந்தியாவின் இராணுவ வல்லமை வெற்றி கண்டாலும், தமிழர்களின் உள்ளத்தையோ, சிங்களவரது இனவாதத்தையோ வெற்றி கொள்ள முடியாமல், அதிபர் பிரேமதாசாவினால் அவமானப்படுத்தப்பட்டு வெளியேறிய வரலாற்றுக் கரியைத் தன் மீது பூசிக் கொண்டது. சிறிலங்கா அரசு அரசியற் கைதிகளை விடுவிக்கத் தவறியது. அவசரகாலச்சட்டத்தை வடக்கு கிழக்கு மாகாணங்களில் நீக்கத் தவறியது கிழக்கு மாகாணத்திலே சிங்கள ஊர் காவற் படையைக் கலைக்கவில்லை இராணுவத்தை முகாமுக்குள் முடக்கவில்லை. தமிழ்ப்பகுதிகளில் சிங்களக்


விடுதலைப்புலிகள், பிரேமதாசா பேச்சுவார்த்தை

தடியேற்றத்தை மூழ் மூரப்படுத்தியது வாக்களித்தவாறு வடகதுகிழக்கு மாகாணங்களை ஒன்றிணைக்கவில்லை. சிறையிலடைக்கப்பட்டவாகளுகதுப் பொதுமன்னிப்பு அளிக்கவில்லை.

சிறிலங்கா அரசின் இத்தனை முரண்பாடுகளையும் இந்திய அரசு கணடுகொள்ளவில்லை. இந்திய அரசைப பொறுத்தவரை வடக்குக்கிழக்தக்கான இடைக்கால அரசை அமைக்கவில்லை தமிழக் காவறறுறையை ஆககவில்லை. விடுதலைப் புலிகளின் ஆயுதங்களைககளைநத அதே வேளையில், புலிகளை வேட்டையாடத் துடிததுத் கொணடிருந்த ஈபி ஆர் எல்.எப போனற தமிழ்க்குழுககளை ஆயுதபாணிகளாககியது உடன்படிக்கைக்கு மாறாக. புலி உறுப்பினர்களை சிறிலங்கா அரசின் பிடியில் சாகவிட்டது இதனாறறான். விநம்பத்தகாத ஒருபோரை இநதியாவிறகெதிராகச் செய்ய வேணடிய நிலை ஈழததமிழருக்கு ஏறபடடது. உடனபடிககைகள பேசசுவாாத்தைகளால் ஏமாற்றபபட்ட கசப்புணர்வு தமிழ்மககளைப பொறுததவரை இநதோடு முடிநது விடவிலலை. சிங்கள பௌத்த பேரினவாதம என்றைககுமே இநதிய விரோத நிலைப்பாட்டை மேகனைப்பிடிததது. இந்த விரோத உணாவைத் தூணடிவிடடு ஜே.ஆரின பின் பிரேமதாசா சிறிலஙகாவின அதிபரானா பதவிககு வந்ததுமே இந்திய இராணுவத்தை அவமானத்தோடு திருபபவைததார் இநதியப் பிரதமா ராஜீவைப் பிடரியிலடித்து அவமானப்படுத்திய இனமேறியனான ரோகண விஜதமுனியைச் சிறையிலிருந்து விடுவிநது இநதியாவை அவமானப்படுத்தினார்

## அவமானத்தோடு திரும்பியது இந்தியப்படை

சிறிலங்கா வெளிநாட்டு இராணுவ உளவுத்துறையினை ஏற்கவே கூடாது இந்திய நலனுக்கு ஊறுவிளைவிக்கும் வகையிலே, திருகோணமலைத் துறைமுகத்தை வேறு ஒருவர் பாவிக்க அனுமதிக்கக் கூடாது திருமலை எண்ணெய்க் களஞ்சியம் இநதிய இலங்கை கூட்டு முயறசியாக இருக்கவேணடும் வெளிநாட்டு ஒலிப்பரப்பு நிறுவனங்களுக்கு ஒலிப்பரபபு வசதிகளைத் தவிர்நத இராணுவ உளவுததுறைக்கு பயன்படுததும் வசதிகள் வழங்கப்படக்கூடாது என்ற தனது நலன் தொடர்பான உடன்படிக்கைகூட நிறைவேறாத நிலையில், இநதியப்படை இராணுவ அரசியல் தோல்விகளோடு இந்தியா திரும்பியது.

பிரேமதாசா தமிழர் பிரதிநிதிகளான புலிகளுடன் பேசி ஒரு சண்டை நிறுத்த உடன்படிக்கைக்கு வந்திருந்தார். இராணுவ வல்லமையால் நியாயம் அற்ற முறையிலே தேர்ந்து எடுக்கபட்டவர்களால் ஆளப்படும் வடக்குகிழக்கு மாகாணசபையைக் கலைப்பது. அரசியல யாப்பில் 06ஆவது திருத்தத்தை நீக்குவது தமிழர் பிரச்சினையைத் தீர்ப்பது எனப் புலிகளோடு அவர் ஒருப்பட்டிருநதார் அரசியல் அமைபபின் ஆறாவது சட்டத்திருத்த நீககம புலிகளின் மீதான தடையை நீக்குவதோடு தாயகம் பற்றிய அமைதியான தீர்வுக்கு வழி வகுக்கக்கூடும் என்றும் தமிழ் மக்கள் நினைத்தனர்.

## இரண்டாம் கட்ட ஈழப்போர் தொடங்கியது

ஆனால், இந்தியப்படை விலகியதும் அதிபர் பிரேமதாசா தனது சிங்கள பௌத்த பேரினவாதத்தை வெளிக்காட்டத் தொடங்கினார். புலிகள் ஆயுதங்களைக் கீழே வைத்தால் மட்டுமே பேச முடியும் என்றும், அதுவரை மாகாணசபைத் தேர்தல் நடைபெறாது என்றும் பாதுகாப்பு அமைச்சர் ரஞ்சன்விஜேரத்ன மிரட்டத் தொடங்கினார். காலங்காலமாக பேச்சுவார்த்தை ஒப்பந்தம், ஒப்பந்த முறிவு என்ற கசப்பான பாடத்தைக் கற்றறிந்த தமிழ்மக்களும் விடுதலைப்புலிகளும் ஏமாறத் தயாராகவில்லை. 1990 மே07இல், சிங்களப்படைகளின் எறிகணைவீச்சுக்கு 12 மாணவியர் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து ஈழப்போர் இரண்டு தொடங்கியது.

ஆயிரக்கணக்கான தமிழ்மக்களின் குருதி வெள்ளத்திலே சிங்களப் பேரினவாதம் நீச்சலடிக்க, விடுதலைப்புலிகளோடு தோளோடு தோள்சேர்ந்து தமிழ்மக்கள் போராடினர். பொருண்மிய, மருந்து, உணவுத்தடைகளால் தமிழ்மக்கள் பட்டதுன்பம் கொஞ்சமல்ல. 1993 மேநாளன்று பிரேமதாசா கொழும்பிலே இடம்பெற்ற குண்டுவெடிப்பிலே கொல்லப்பட, தொடர்ந்து அதிபராய் வந்த டி.பி.விஜயதுங்க "தமிழர்கள் கொடி சிங்களவர் மரம்"என்று இனவாதம் கக்கத்தொடங்கினார்.

## அமைதிப் புறாவாக நடித்து ஆட்சியைப் பிடித்த சந்திரிக்கா

1994இல், சந்திரிக்கா பண்டாரநாயக்கா குமாரதுங்கா பொதுஜன ஐக்கிய முன்னணி சார்பிலே அதிபர் தேர்தலுக்கு நின்றார். யுத்தநிறுத்தம், பேச்சுவார்த்தை தமிழர்களின் பிரச்சனை தீர்த்தல் என்ற வாக்குறுதிகளோடு தேர்தல் மேடைகளிலே தோன்றினார். இவரது சமாதான முழக்கம் சிங்களவர் மத்தியிலே மட்டுமல்ல தமிழர்கள் மத்தியிலும் ஒரு நம்பிக்கையை ஏற்படுத்தியது. திம்புப் பேச்சுவார்த்தைகளின்போது முன்வைத்த 04 அடிப்படைக் கோரிக்கைகளை ஏற்று, தமிழர் பிரச்சினைக்கு ஒரு ஏற்புடைய தீர்வை சந்திரிக்கா வழங்கக்கூடும் என்று தமிழர்கள் எதிர்பார்த்தனர். வரலாற்றிலே இல்லாதவாறான பெரும்பான்மையோடு சந்திரிக்கா வெற்றியும் கொண்டார் அவருடைய வியத்தகு வெற்றிக்கு தமிழ்மக்களின் வாக்குகளே பெரும் காரணமாயிற்று.

## சந்திரிக்கா அரசுடன் விடுதலைப்புலிகள் பேச்சுவார்த்தை

தேர்தலில் வென்றதும் யுத்த நிறுத்தம் அறிவிக்கப்பட்டது பேச்சுவார்த்தையும் தொடங்கியது. அரசியற் சிக்கல்களைப்பற்றி ஆராய்வதற்கு முன்னர் தம்முடைய அன்றாடச் சிக்கல்கள் தீர்க்கப்பட்டு இயல்பு நிலை தோற்றுவிக்கப்படவேண்டும் என்று தமிழர் தரப்பு வலியுறுத்தியது. பொருண்மிய, மருந்துவ, வாழ்வியல், தடைகளின் உச்சத்தை உயத்துணர்ந்து உருக்குலைந்த தமிழர்கள், தம்மீது விதிக்கப்பட்ட இந்தத்தடைகள் நீக்கப்பட்ட இயல்பு

நிலையிலேதான உறுதியான பேச்சுவார்த்தையில் ஈடுபடமுடியும் என்று வாதிட்டது. இயல்பு நிலையை மீறிய செயலல்ல. சந்திரிக்கா அரசின் சார்பிலே பேச்சுவார்த்தை மேசைக்கு வந்தவர்கள் எவருமே, தாமாக ஒரு முடிவை எடுக்கக்கூடியவர்களாக இருக்கவில்லை பேச்சுவார்த்தையின்போது முன் வைக்கப்பட்ட ஒவ்வொரு முன்மொழிவுக்கும் கொழும்பிலே முடிவு செய்து சொல்கின்றோம் என்று அவர்கள் சொல்லிக் கொண்டார்கள். சந்திரிக்கா அரசைப் பொறுத்தவரை தமிழர்களின் இயல்புவாழ்க்கையை மீண்டும் கொண்டு வருவதற்கான எந்தவித அக்கறையையும் அது காட்டவில்லை. சில


சந்திரிக்கா


சந்திரிக்கா அரசுடன் விடுதலைப்புலிகள் பேச்சுவார்த்தை

பொருட்களுக்கான தடை தளர்த்தப்பட்டதாக அரச வர்த்தமானியில் அறிவிக்கப்பட்டாலும் அவை தமிழர் பகுதிக்குக் கொண்டுவரப்படுவதை அரச இராணுவமே தடுத்து நிறுத்தியது.

பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்த காலகட்டத்தை, சந்திரிக்கா அரசு அமைதியைத் திரும்பக் கொண்டு வரும் முயற்சிக்காகப் பயன்படுத்தவில்லை. மாறாக, வெளிநாடுகளிலிருந்து இராணுவத்துக்குத் தேவையான ஆயுததளபாடங்களை வாங்கிக் குவிக்கவே பயன்படுத்தியது. இராணுவத்துக்குத ஆட்சேர்க்கும் வேலையும் மிக மும்முரமாக நடந்தது சந்திரிக்கா அரசின் இரட்டைப் போக்குப் பற்றி, தமிழீழ விடுதலைப்புலிகள் பலவாறு எச்சரித்தனர் தமிழர்கள் அன்றாடச் சிக்கல்களுக்கான தீர்வைக் காலந் தாழ்த்தாது செய்யுமாறு பல கடிதங்கள் அவருக்கு எழுதப்பட்டன.

## 3ஆவது ஈழப்போர் தொடங்கியது

ஆனால், பொருண்மியததடைகளை நீக்க சந்திரிக்கா முனவரவில்லை அரசியல் தீர்வுக்குப் பின்னரே அன்றா ப் பிரச்சினைகளுககான தீர்வு என்ற கடும் போக்கைக் கடைப்பிடிக்கத் தொடங்கினா தமிழர்கள் கைவிலங்கிடப்பட்ட நிலையிலே பேசுவதற்குத த யாராகவில்லை. ஒருவரை ஒருவர் புரிந்து கொண்ட, ஐயங்கள் அற்ற இயல்பு நிலையிலே. சமநிலையான ஒருபேச்சுவார்த்தையை அவாகள வேண்டினார்கள் சந்திரிக்கா புத்த தயாரிப்புக்கான. ஒரு கால இடைவெளித் தேவையை. போலிப பேசசுவாாத்தை நாடகத்தால பெற





நினைக்கின்றார் என்பது தமிழர்களுக்குத் தெளிவாகத் தெரியத் தொடங்கியதால், பேச்சுவார்த்தை முறிந்து, 1995 ஏப்ரல் 19ஆம் நாள் ஈழப்போர் 3 தொடங்கியது.

சிங்களப் பேரினவாதம் தமிழர்களை ஏமாற்றிய இன்னொரு பேச்சுவார்த்தையும் முடிவுக்கு வந்தது. ஆளுங்கட்சி தமிழர்களோடு பேசும்போது எதிர்க்கட்சி எதிர்த்து ஊரைக்கூட்டி, ஊர்வலம் நடத்துவதும், எதிர்க்கட்சி ஆளுங்கட்சியாகி தமிழரோடு பேசும்போது முன்னைய ஆளுங்கட்சி மூர்க்கமாக எதிர்ப்பதும் உடன்படிக்கைகளைக் கிழித்தெறிவதுந்தான் சிங்களப் பேரினவாதத் திடமிருந்து தமிழர் இதுவரை கண்டு கொண்ட அனுபவம். சந்திரிக்கா அரசு தமிழர்கள் மீது கட்டவிழ்த்து விட்ட கொடுமைகள் கொஞ்சமல்ல. 5 இலட்சத்துக்கு மேற்பட்ட யாழ்ப்பாண மக்கள் 1995 ஒக்டோபரில், ஒட்டுமொத்தமாக புலம்பெயர்ந்த துயரம் இவரது ஆட்சியிலேதான் நடந்தது. கோவில்கள், பள்ளிகள் இடிப்பு, குழந்தைகள் கொலை, பொருளாதார, மருந்து, உணவுப் பொருட்கள் தடையென்று அடக்குமுறையின் உச்சத்தை இவர் காலத்திலே தமிழர்கள் பட்டுணர்ந்தனர். தமிழர்களைப் பொறுத்தவரை, சிங்களப் பேரினவாதத்திடம் முற்றாக நம்பிக்கை இழந்த நிலையில், தங்கள் தலைவிதியைத் தாங்களே தீர்மானிக்கும் போரை நிகழ்த்திக் கொண்டிருக்கின்றார்கள். கொஞ்சம் கொஞ்சமாகத் தமது

தாயக நிலத்தையும் மீட்டுக் கொண்டிருக்கின்றார்கள் ஒரு தேசிய இனத்துக்கு. அதுவும் 17ஆம் நூற்றாண்டு முற்பகுதிவரை தமிழ் ஈழத்திலே தனியரசு செய்துவந்த இனத்துக்கு. தனது நிலத்தை மீட்டு தன் இறையாண்மையை நிலைநாட்டும் உரிமையுண்டு. தமிழரின் தேசியத்தை. தாயக நிலத்தை. சமத்துவ உரிமையை. பிரிந்து போகும் உரிமையை. ஏற்கத் தயங்குகின்ற. மறுக்கின்ற சிங்கள பௌத்தக் கோட்பாட்டாளரோடு இனியும் ஒன்றித்து ஒரு கொடிக் கீழ் வாழமுடியாது என்ற பட்டறிந்த நிலைப்பாட்டுக்குத் தமிழர் வந்துள்ளனர்.

நியாயம் தெரிந்த உலக நாடுகளின் அனுதாபத்தையும் ஆதரவையும் தமிழ் மக்கள் எப்போதும் வேண்டியே நிற்கின்றனர். போர்க் கலாசாரத்தை மறுதலிக்கும் மனப்பாங்கு தமிழருக்கு இருக்கும் காரணத்தினாலே தான சமாதானப் பேச்சுவார்த்தையென்பது மூன்றாந்தரப்பு ஒத்துழைப்போடும் நடுநிலையோடும் நடைபெறவேண்டுமென்று கோரினர்



எரிக் சொல்கெய்ம்

தமிழர்கள் பலவேறு தடவைகளில் இக்கோரிக்கையை விடுத்தாலும், உள்நாட்டுச் சிக்கல்களில் வெளியார் தலையீடு தேவையில்லை என்று சிறிலங்கா அரசு மறுத்தது. அதேவேளை, கொடிய அடக்குமுறையைத் தமிழர்கள் மீது கட்டவிழ்த்துவிட்டது. எந்த ஒரு வடிவத்திலும் தமிழர்களுக்கான உரிமைகளைச் சிறிலங்கா அரசு தரப்போவதில்லை. ஏனெனில், சிங்களவரது பேரினவாதமும் பௌத்த பீடங்களும் தரவிடப்போவதில்லை. ஏனெனில், சிங்களவரது பேரினவாதம் வரலாற்று அடிப்படைக்குப் பதிலாக மகாவம்சம் என்ற அடிப்படையிற் கட்டப்பட்டிருக்கின்றது. ஜேம்ஸ் கேகரன் "தமிழ் தேசியப் போராட்டம்" என்ற தனது கட்டுரையில் கூறுவதைப் போல, அவர்களது தொடர்ந்த இருப்பையும் ஒன்றிணைந்த சிறிலங்காவுக்குள் பெற்றுக் கொள்ள எல்லா வழிகளிலும் முயற்சித்துக் களைத்த பின்னர்தான், வேறுவழி ஏதும் இல்லாத நிலையில், தங்கள் மீதான இனப்படுகொலையை எதிர்ப்பதற்காக, தமிழ் மக்கள் ஆயுதக்கிளர்ச்சியில் ஈடுபட நேர்ந்தது. நோர்வே அரசு, இலங்கைச் சிக்கலுக்கான தீர்வில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள முனைந்தது. தான் ஒரு மூன்றாந் தரப்பு நடுநிலையாளராகவோ ஒத்துழைப்பாளராகவோ பணிசெய்ய முனைந்தது. அது நேரடியாக வெளிநாட்டமைச்சர் கொழும்புக்கு வந்து அரசோடு



நோர்வேயின் தேசியக் கொடியை எரிக்கும் இனவெறியர்கள்

ஆலோசனை கலந்தார். இதனைச் சிங்கள பௌதத பேரினவாதம் எப்படி எதிர்த்துக் கொண்டது? சிங்கள வகுப்புவாத அமைப்புக்களோடு சோநத பௌதத துறவிகள். நோர்வேதூதுரைகத்துக்குமுன் கூடி. நோர்வேயின தேசியககொடியை எரிததாரகள். பயஙகரவாதிகளான புலிகளின நட்பு நாடென்று. நோர்வேயை அடையாளம் காட்டினாரகள். இந்தியா முன்பு தலையிட்டபோதும் இதையேதான கூறினாரகள. இனியும் இதையேதான் கூறுவாரகள. தமிழீழம எனகின்ற தமது இலக்கை நோககி. தமிழர்களின் போராட்டம் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறத தொடஙகியது. சிறிலங்கா அரசு இன்று நட்பு நாடுகளிடம் உதவிக்க அலைநதுகொணடிருககிறது. பேச்சுவார்த்தை மூலம தமிழர் பிரச்சினையை முழுமனதுடன தீர்ப்பதறகலல. இராணுவ ஆயுத உதவிகளைப் பெற்று தமிழரகளை முற்றாக அழிப்பதற்கே என்பதை உலக நாடுகள் புரிந்து கொள்ள வேணடும. உலக நாடுகளிடம் சிறிலங்கா எதிர்பாரக்கின்ற உதவி எத்தகையது. சிங்கள பௌத்த பேரினவாத வெறியரான பேராசிரியர் நளின் டிசில்வா 05.03.2000 ஆம நாளைய ஐலணட பததிரிகையில வரைந்த கட்டுரையில கூறுகின்றார.

"நட்பு நாடுகளிடம உதவி கோரும் பிரச்சினையிருக்கினறது. ரஷ்யா. சீனா. இந்தியா அல்லது வேறு நாடுகளிலிருந்து நாம் உதவி பெறறாலும. அது ஒரு வரையறையின் பேரிலேயே இருக்க வேணடும். அவரகள் தங்கள் உதவியை வழங்க வேணடுமேயொழிய. தமது தத்துவங்களையல்ல எங்களுடைய சிக்கல்களை நாங்கள விரும்பும் வழியிலே தீரததுக் கொள்வோம். உதவி வழங்கும நாடுகள விரும்பும் வழிகளிலல்ல. அவர்கள எமகது உதவுவதாயின் எமக்குத் தேவையானதைத் தரட்டும. எல்.டி.டிஈ.யும் தமிழ் இனவாதமும் விரும்புவதையல்ல. அவர்கள எங்களுடைய நண்பர்களாயின் அவர்கள் எல.டி.டி ஈஇன் நண்பர்களாக இருக்கவே முடியாது. தமிழ் இனவாதத்தின் நண்பர்கள், வேடம் போடுவதாலேயே நாம் இந்தத் துயரமான நிலையில் இருககின்றோம்."


நளின் டி சில்வா

அது நளின் டி.சில்வாவின் கருத்து மட்டுமல்ல. சிங்கள பௌத்த அரசின். பௌத்த மடங்களின் கருத்தும் அதுவேதான். இதன்படி எல்.டி.டிஈ.யையும் தமிழர்களையும் வெறுக்கக்கூடிய சிறிலங்காவின் நண்பர்களையே. உதவியென்ற பெயரில் தமிழரை அழிக்க சிறிலஙகா அழைகக விரும்புகின்றது பேசசுவார்த்தைகளைப் பொறுததமட்டில், மிகக கசப்பான பாடங்களைத் தமிழரகள படித்துவிட்டார்கள். எந்த ஒரு உடன் படிக்கையையும சிறிலஙகா அரசு மிக எளிதாகக் கிழிதது வீசிவிடும் என்பது தமிழர்களுக்குத தெரியும். எனவே. தமிழர்களின் இயலபுவாழ்க்கை மீள்கின்ற வரையில். போரின முழக்கம் தமிழ் நிலததில் கேட்கின்றவரையில் தமிழரின தேசிய பாரமபரிய நில. சுயநிரணய உரிமை என்ற அடிப்படைகள் ஏற்றுக் கொள்ளப்படுமவரையில. எந்த ஒரு பேச்சு வார்த்தையும

தமிழர்க்கு உவப்பானதாக இருக்காது என்பதே உண்மை. இந்த நிலைப்பாட்டில், வரலாற்று பட்டறிவுகளாலே தமிழர்கள் உறுதியாக இருக்கின்றார்கள்.

பேச்சுவார்த்தைக்குு முன்னோடியான இந்த அடிப்படைகள் இடப்பட்டால், அது நிலைக்கக்கூடிய உறுதியைச் சிறிலங்கா அரசு கொடுக்க முனவந்தால் மூன்றாந் தரப்பு உதவியுடனும் உறுதியுடனும் தமிழர்கள் பேச முற்படலாம். இல்லையேல், தமிழர் தமது வரலாற்றுத் தாயகத்தை மீட்டு வாழ்வது அல்லது தன்மானத்தோடு மதிப்போடும் சாவை எதிர்கொள்வது என்ற முடிவுக்கு வந்துவிட்டார்கள். இந்நிலை, தன்மானம் உள்ள எந்த இனத்தவராலும் தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

## முடிவுரை

வரலாறு சொல்லும் பாடம்என்ற இந்த நூல் 2000ஆம் ஆண்டில் எழுதப்பட்டு கல்லசசில வெளியிடப்பட்டது காலத்தின். சூழ்நிலையின் தேவை கருதி இது இரண்டாம பதிப்பாகத் தற்போது வெளிவருகிறது.

இந்நூலிலே குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்வுகளுக்குப பின கடந்த ஏழு ஆண்டுகளில் ஏராளமான மாற்றங்கள் நடந்து முடிந்துவிட்டன

குடியரசுத் தலைவர் சந்திரிக்காவால் இலங்கையில் 11ஆவது நாடாளுமன்றம் கலைக்கப்பட்டு 12ஆவது நாடாளுமன்றத் தேர்தலின் மூலம் ரணில் விக்கிரமசிங்க தலைமையமைச்சராகப பொறுப்பேற்ற நிலையில், ஏற்கெனவே கட்டு நாயக்காவிலும், தீச்சுவாலையிலும் புலிகளின் தாக்குதல்களினால் அடிவாங்கி நலிந்திருந்தது சிங்கள இராணுவம். புதிய அரசு பதவியேற்றதும் நோர்வேயின் அமைதி முயற்சி தொடர்ந்தது.

அமைதிப் பேச்சு வார்த்தைக்கு நடுநிலைமையாளராகச் செயற்பட நோர்வே நாடு விருப்பம் தெரிவித்ததும தமிழீழத் தேசியத் தலைவர் பிரபாகரன் அவர்கள் நோர்வேயை அமைதி முயற்சிக்கான பேச்சு வார்த்தைக்கு நடுநிலைமையாளராகச் செயற்பட வருமாறு அழைப்பு விடுத்தார். நோர்வேயும் நடுநிலைமையாளராக இருந்து அமைதிப் பேச்சுவார்த்தைக்கு ஒத்துழைப்புத்தர முன்வந்ததைத் தொடர்ந்து தலைமையமைச்சர் ரணில் விக்கிரசிங்காவுக்கும், தமிழீழத் தேசியத் தலைவர் பிரபாகரன் அவர்களுக்குமிடையில் நோர்வேயின் முயற்சியால் புரிந்துணர்வு உடன்படிக்கை ஏற்பட்டு போர் நிறுத்தம நடைமுறைக்கு வந்தது. அமைதிக்கான உடன்படிக்கையின்படி தமிழர் நலன்கள் எவையும் பேணப்படவில்லை

- உயர்பாதுகாப்பு வலயத்தைவிட்டுச் சிங்களப்படை வெளியேறவில்லை. 15 உயர்பாதுகாப்பு வலயப்பகுதிகளில் தமிழ்மக்கள் மீளக்குடியேற அனுமதிக்கப்படவில்லை.
- பள்ளிகள், கோயில்கள், மற்றும் பொது இடங்களில் இருந்த படைகள் அகற்றப்படவில்லை.
- ஆயுதக் குழுக்களிடமிருந்து ஆயுதங்கள் களையப்படவில்லை
- உடன்படிக்கையின்படி அரசியற பணிக்குச் சென்ற விடுதலைப் புலிகள் உறுப்பினர்கள், குறிப்பாகப பெண்புலிகள் சிங்களப்படையினரால் சிறுமைப்படுத்தப்பட்டனர். இழிவு படுத்தப்பட்டனர்.
- விடுதலைப் புலி உறுப்பினர்கள்; பலர் கைதுசெய்யப்பட்டு நீதிமன்றங்களில் நிறுத்தப்பட்டுள்ளனர்.
- தமிழ்மக்களின் அமைதி வழி உரிமைக்குரல்கள் படை வல்லமையால் அடக்கப்பட்டன.
- ஆறு சுற்று அமைதிப் பேச்சுக்களும் பயனின்றி இடைப்பட்டன.

- திச்சுவாலை பிலும். கட்டுநாயக்காவிலும் அடிபட்டு உருக்குலைந்து போயிருந்த சிங்களப்படையை விரைந்து சீர்செய்வதற்காகவே. கால இடைவெளிகளைச் சிங்கள அரசு வஞ்சனையோடு பயன்படுத்துகிறது என்று பொது மக்களே பேசத்தலைப்பட்டனர்.

பேச்சுவார்த்தையை நடாத்திக் கொண்டே விடுதலைப் புலிகளிலிருந்து கருணாவை பிரித்து புலிகளை வலுவிழக்கச் செய்து கிழக்கு மாகாணத்தைக் கைப்பற்றும் கபட முயற்சியில் ரணிலின் அரசு இறங்கியது சீர்கெட்டிருந்த நிலைமையை மேலும் குழப்புகின்ற வகையில குடியரசுத்தலைவா சந்திரிககா. ரணிலின் ஆட்சியைக் கலைத்ததுடன். தமிழர்களுக்கு உரிமைகள் கொடுக்கக் கூடாது என்ற பிடிவாதம் பிடித்த கடும் போக்காளர்களுடன் கைகோத்துக் கொண்டு தேர்தலில் நின்று தொங்கு பாராளுமன்றத்தை அமைத்துக் கொண்டார் அதன் பின் அமைதி முயற்சிக்கான உடன்படிக்கை முற்றிலுமாக வெளிப்படையாகவே மீறப்பட்டது.

- அரசியற்பணிக்குச் சென்ற புலிகள் செல்லும் வழிகளில் தறிவைத்துத் தாக்கப்பட்டனர்; கொல்லப்பட்டனர் பழி துரோகி கருணாவின் மீது சுமத்தப்பட்டது.

- புலிகளின் கட்டுப்பாட்டுப் பகுதிக்குள் இருந்த புலிகளின் முகாம் மீதும் ஆழ ஊடுருவி ஒட்டுப்படைகளின் ஒத்துழைப்புடன் தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டன.

- புலிகள் மட்டுமின்றி. தமிழர் உரிமைக்குரலை ஓங்கி ஒலித்த அரசியற்றலைவர்கள் பலர் கொல்லப்பட்டனர்.

- தமிழ் ஊடகவியலாளர்கள் பலர் வரிசையாகக் கொல்லப்பட்டனர். தமிழ ஊடகங்கள் பல அச்சுறுத்தலுக்குள்ளாகின.

- தமிழ் மக்கள் உரிமைக்குரலுக்கு. அரசின செயற்பாடுகளுக்கு தடைகளும் அச்சுறுத்தல்களும் விடுக்கப்பட்ட நிலையில் அமைதி முயற்சியை. அதில் ஈடுபட்ட நடுநிலை நாடுகளையும் வெளிப்படையாகவே எதிர்த்து இனவெறியைக் கிளப்பிவந்தவர்களின் செயற்பாடுகளுக்கு அரசின் அனுமதியும். பாதுகாப்பும் வழங்கப்பட்டன மூன்றாவது ஈழப்போருக்கு வித்திட்டது போலவே நான்காவது ஈழப்போருக்குக்கான சூழ்நிலையையும் சந்திரிக்காவே ஏற்படுத்தினார் தன் ஆட்சிக்காலத்தை நீடடி அரியணையில் தொடர்ந்திருக்க முற்பட்ட சந்திரிக்காவின் பெருவிருப்பில் மண்விழுந்தது.

பண்டா குடும்பத்தின் அரசியல் வாழ்வை முற்றாக ஒழித்துக்கட்டி ஆட்சியைக்கைப்பற்றும் திட்டத்தோடு செயற்பட்ட ஜே.வி.பியினருடனும் ஹெல உறுமயவுடனும் கூட்டணி வைத்து மகிந்த சனாதிபதியானார். 10ஆண்டுகள்

நாடாண்ட சந்திரிக்கா அவமானப்படுத்தப்பட்டு அரசியலை விட்டே ஓரங்கட்டப்பட்டு ஒதுக்கப்பட்டார்.

இனவெறியர்களின் கூட்டணி மகிந்த சிந்தனையின்படி விடுதலைப் புலிகளுக்கும் தமிழ்மக்களுக்கும் எதிராக மட்டுமல்லாது அமைதி முயற்சிக்கு முன்னின்றுழைக்கும் நோர்வேக்கெதிராகவும், இணைத்தலைமை நாடுகளுக் கெதிராகவும், சிங்கள மக்களைத் தூண்டிவிடும் வகையிலான கிளர்ச்சிகள், ஊர்வலங்கள், பரப்புரைகளையும், நடத்துவதற்கு அனுமதியும், பாதுகாப்பும் உள்நோக்கத்துடன் வழங்கப்பட்டு வருகின்றன.

போர்நடைபெற்ற கடந்த காலங்களையும், மிஞ்சுகின்ற வகையில முப்படைகளும் ஏவப்பட்டு தமிழ்ப் பொதுமக்கள் கொல்லப்பட்டுப், படுகாயங்களுக்கு உள்ளாகியும் வருகின்றனர்.

அறிவிக்கப்படாத (பிரகடனப்படுத்தப்படாத) பெரும் போர் தமிழ்மக்களுக் கெதிராக கடந்த 11-08 2006 அன்று முதல் நிகழ்த்தப்பட்டு வருகிறது

இந்த ஏழு ஆண்டுகால நிகழ்வுகள் விரிவாகவும், விளக்கமாகவும் தமிழீழ மக்களுக்காக 'வரலாறு சொல்லும் பாடம் - பாகம் 2' ஆக விரைவில் வெளிவர இருக்கின்றது.

## அடிக்குறிப்புக்களின் விளக்கம்

01 (ஒன்பதாம் பக்கம்)

கண்டி ஆட்சிப்பகுதியைக் கடைசியாக ஆண்ட நான்கு மன்னர்களும் தமிழ் மன்னர்கள் 1709 முதல் 1739 வரை ஆட்சி நடத்திய சிங்கள மன்னன் வீரநரேந்திரசிங்கனின் சிறிய தாயார்,மனைவி ஆகியோர் தமிழகத்துப் பெண்கள் வீரநரேந்திர சிங்கனுக்குப்பின், அவனது ஆட்சி அவன் மனைவியின் உடன் பிறந்தவனாகிய **விசயராசசிங்கனிடம்** சென்றது.

தமிழகத்தைச்சேர்ந்த நாயக்க மரபினனான **விசயராசசிங்கன்** 1739 1747 வரை ஆட்சி நடத்தினான் அதன் பின், 1747-1782 வரை, விசயராசசிங்கனின் மனைவியின் உடன்பிறந்தானாகிய **கீர்த்தி சிறி ராசசிங்கன்** ஆட்சிநடத்தினான் அதன்பின் 1782-1798 வரை, **கீர்த்தி சிறி ராசசிங்கனின்** தம்பி **இராசாதி ராசசிங்கன்** ஆட்சி நடத்தினான். அவனுக்குப் பின் 1798-1815 வரை, **இராசாதி ராசசிங்கனின்** மனைவியின் உடன் பிறந்தானாகிய **சிறிவிக்கிரமராசசிங்கன்** ஆட்சி நடத்தினான். இவனே கண்டியின் கடைசி மன்னன்.

02 (11ஆம் பக்கம்)

இலங்கையின் முதல் ஆங்கிலேய ஆளுநர் பிரடரிக்நோத் அவர்களின் செயலாளராக இருந்தவர் பேராசிரியர் யூ கிளெகோர்ன். அவர் 1799 ஆன் 1ஆம் நாள் இலங்கைத்தீவு பற்றி எழுதிய குறிப்பிலிருந்து..........

"இலங்கைத்தீவானது மிகப் பழங்காலந்தொட்டே இரு வெவ்வேறு நாட்டினர்களால், வெவ்வேறு பகுதிகளாக உரிமை கொண்டாடப்பட்டது. இத்தீவின் நடுப்பகுதியும், தெற்குப்பகுதியும், வளவை ஆற்றிலிருந்து சிலாபம் வரையுமுள்ள மேற்குப்பகுதியும் சிங்கள நாட்டினத்தால் ஆட்சி செய்யப்பட்ட பகுதிகளாகும்.

இத்தீவின் வடக்கு, கிழக்கு நிலப்பகுதிகள் தமிழரால் ஆட்சி செய்யப்பட்ட பகுதிகளாகும். இந்த இரு நாட்டினங்களும சமயத்தாலும், மொழியாலும், வாழ்க்கைப் பண்பாலும் முறறிலும் வேறுபட்டவை (கிளெகோர்ன் ஸ்கொட்லாந்தைச் சேர்ந்தவர்)

03 (12ஆம் பக்கம்)

இலங்கைத் தீவு முழுவதையும் 1815 இல் கைப்பற்றிய ஆங்கிலேயர், மூன்று ஆட்சிப்பகுதிகளாக நீண்ட காலமாக இருந்த யாழ்ப்பாணம், கண்டி, கோட்டை (கொழும்பு) ஆட்சிப்பகுதிகளை 1833 இல் ஒன்றிணைத்து ஒரே ஆளுகையின் கீழ் கொண்டு வந்தனர்.

ஒன்றிணைப்புக்கு முன் 1827 இல் மேற்கொள்ளப்பட்ட குடிசன மதிப்பீட்டின்படி கிழக்கு மாகாணத்தில 74.68% தமிழர்களும், 24.78% முஸ்லிமகளுமாக 99.4% தமிழ் பேசும் மக்கள வாழ்ந்தனர். ஆக 0.5% சிங்கள மக்களே கிழக்கில் அக்காலத்தில் வாழ்ந்தனா

1833 இல் வடக்கு, கிழக்கு மாகாணங்களுடன் பல சிங்களப் பகுதிகள் ஒன்றிணைக்கப்பட்டு மாகாண ஆளுகை மேற்கொள்ளப்பட்ட போதிலும், வெவ்வேறு மொழி, கலை, பண்பாடுகளைக் கொண்ட தமிழ்-சிங்கள மக்களை ஒன்றாக வைத்து ஆளுகையை மேற்கொள்வதிலுள்ள சிக்கல்களை நன்குணர்ந்த ஆளுநர் சேர் வில்லியம கிரேகரி அவர்கள் தமிழ்ப்பகுதிகளுடன் ஒன்றிணைக்கப்பட்ட சிங்களப் பகுதிகளை வேறாக்கி 1873 இல் புதிய மாகாணங்களை உருவாக்கினார். இன்றைய வடக்கு, கிழக்கு மாகாணங்கள் சேர் வில்லியம் கிரேகரி அவர்களினால 1873 இல் தமிழர் பகுதிகள் என அடையாளங் காணப்பட்டன.

தமிழர் பகுதி என அவரால் அடையாளங் காட்டப்பட்ட பின் அந்த குடிசன மதிப்பீடு 1881 இல் மேற்கொள்ளப்பட்டது

1881 இல் மேற்கொள்ளப்பட்ட குடிசன மதிப்பீட்டின்படி 59.11% தமிழர்களும, 33.71% முஸ்லிம்களுமாக 92.82% தமிழ் பேசும் மக்கள் கிழக்கு மாகாணத்தில் வாழ்ந்தனா. சிங்கள மக்கள் விதம் 4.66% ஆகவும் ஏனையோரின் விதம் 2.52% ஆகவும் இருந்தது.

டொனமூர் அரசியற் திட்டத்தின் கீழ் 10 அமைச்சுத்துறைகளில் ஐரோப்பியரிடமிருந்த மூன்று துறைகள் தவிர, ஏனைய துறைகளுக்கான ஆளுகை சிங்களர் கைகளுக்கு மாறியது. அதன் பின் 1946 இல் எடுக்கப்பட்ட குடிசன மதிப்பீட்டின்படி தமிழர் 48.74% ஆகக் குறைந்தது சிங்களவர் 9.87% ஆகக் கூடியது.

சோல்பரி அரசியல் திட்டத்தின் கீழ் சிங்களவரிடம் இலங்கையின ஆளுகைப பொறுப்பு முழுமையாகக் கைமாறியதன் பின், திட்டமிட்டுத் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வந்த சிங்களக் குடியேற்றங்களினால் கிழக்கு மாகாணத்தில் தமிழ் மக்கள் குடித்தொகை 41.93% ஆகக் குறைய சிங்கள மக்கள் குடித்தொகை 24.92% ஆக உயர்ந்தது

சிங்கள இனத்தவரிடம ஆளுகைப் பொறுப்புக் கிடைப்பதற்கு முன்னர் 1921 இல், கிழக்கு மாகாணத்தில் 4.53% இருந்த சிங்களக் குடித்தொகை 60 ஆண்டு சிங்கள ஆளுகையில் 1981 இல 24.92% ஆக (20%) உயர்ந்திருந்தபோது தமிழர் குடித்தொகை 14%ஆல் குறைந்தது

1981 இற்குப் பின் நாடு முழுவதும் குடித்தொகைக் கணக்கெடுப்பு முறையாக மேற்கொள்ளப்படவில்லை. கிழக்கு மாகாணத்திலும் வடமாகாண எல்லைப்புறங்களிலும் பெருமளவு சிங்களக்குடியேற்றங்கள் மேற்கொள்ளப்பட்டதுடன், அரசுப் படையினராலும் சிங்களக் காடையர்களினாலும் பெருமளவு தமிழ் மக்கள் அச்சுறுத்தப்பட்டு தமது நிலங்களிலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். 10 இலட்சத்திற்குக் கூடுதலான மக்கள் அருகிலுள்ள தமிழகத்திற்கும், மேலை நாடுகளுக்கும் புலம்பெயர்ந்து சென்று புகலிடம் தேடியுள்ளனர்.

இந்த நிலை தொடருமானால் விரைவில் இலங்கைத்தீவில் தமிழினம் முற்றாக அழித்தொழிக்கப்படும் நிலை ஏற்படும் என அஞ்சப்படுகிறது.

94 ஆண்டு கால (1827-1921) ஆங்கிலேயர் ஆட்சியில் 4% மட்டும் உயர்ந்த சிங்களக்குடித்தொகை 50 ஆண்டு கால சிங்கள ஆட்சியில் (1931-1981) 20.5% உயர்ந்திருப்பதையும் தமிழர் குடித்தொகை 14% ஆகக் குறைந்திருப்பதையும் 12 ஆம் பக்கத்திலுள்ள கிழக்கு மாகாணக் குடித்தொகைப் பட்டியல் தெள்ளித் தெளிவுபடுத்துகிறது

**04 (14 ஆம் பக்கம்)**

| 1911 தேர்தல் முடிவு | | 1916 தேர்தல் முடிவு | |
|---|---|---|---|
| மொத்த வாக்காளர் | 2957 | மொத்த வாக்காளர் | 3013 |
| வாக்களித்தவர்கள் | 2626 | வாக்களித்தவர்கள் | 1752 |
| பொன். இராமநாதன் | 1645 | பொன்.இராமநாதன் | 1704 |
| மார்க்கஸ் பெர்னான்டோ | 981 | டீ. எஸ். ஜெயவர்த்தனா | 48 |
| கூடுதல் வாக்குகள் | 664 | கூடுதல் வாக்குகள் | 1656 |

**05 (17 ஆம் பக்கம்)**

மானிங் டிவென்சியர் அரசியல் சீர்திருத்தத்திற்கு மாற்றாக புதிய சீர்திருத்தம் வழங்குவது பற்றி ஆராய்வதற்கென 1927இல் வந்த டொனமூர் குழுவின் முன், கண்டிச் சிங்களப் பிரதிநிதிகள் சார்பில் கண்டிச் சிங்களவர்களுக்குத் தனியாகவும் தமிழ் மக்களுக்குத் தனியாகவும் கரையோரச் சிங்களவர்களுக்குத் தனியாகவும் என மூன்று மாநிலங்களைக் கொண்ட சமஷ்டி அரசியல் அமைப்பு கோரப்பட்டது.

அவ்வேளையில், சிங்களவர்களையும் சேர்த்து முழு இலங்கையையும் ஆளும் கனவில் மிதந்த தமிழ்த் தலைவர்கள் கண்டிப் பிரதிநிதிகள் கோரிக்கைக்கு ஆதரவு தரத்தவறியது இலங்கை அரசியல் வரலாற்றிலே தமிழ்த் தலைவர்கள் விட்ட மாபெரும் தவறாகவும் தமிழினத்திற்கேற்பட்ட பெரும் கேடாகவும் கருதப்படுகிறது.

## 06 (20 ஆம் பக்கம்)

டொனமூர் அரசியல் அமைப்பின்படி 1936இல் 03ஐரோப்பிய அமைச்சுக்களையும் 07 உள்ளூர் அமைச்சுக்களையும் கொண்ட இரண்டாவது அரசாங்கசபை அமைந்தது. 50 உறுப்பினர்களைக் கொண்ட அரசாங்கசபையில் 28 உறுப்பினர்களைக் கொண்டு 7 உள்ளூர் அமைச்சர்களையும் சிங்களவர்களைக் கொண்டதாக அமைப்பதற்கு டி.எஸ் சேனநாயக்காவுக்கு வழிகாட்டியவர் பேராசிரியர் செ. சுந்தரலிங்கம் அவர்கள். 7 அமைச்சுக் குழுக்கள் அமைக்கப்பட்டபோது ஒவ்வொரு குழுவிலும் நான்கு உறுப்பினர்கள் இணைந்து தமக்குள் ஒருவரை அமைச்சுக் குழுக்களின் தலைவர்களாகத் (அமைச்சர்களாக) தேர்ந்தெடுக்க வழிகாட்டினார் பேராசிரியர் சுந்தரலிங்கம்

## 07-(21ஆம்பக்கம்)

தேர்தலின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட மூதவை உறுப்பினர்களான டாக்டர் ஈ.எம்.வி நாகநாதன், சேர் ராசீக் பரீத், திரு சி.ஏ. தர்மபால ஆகியோர் 1952 ஆம் ஆண்டு நடைபெற்ற இரண்டாவது பாராளுமன்றப் பொதுத் தேர்தலில் போட்டியிடுவதற்காக தமது மூதவை உறுப்பினர் பதவிகளைத் துறந்தனர்.

தமிழ், சிங்கள, முஸ்லீம் மூதவை உறுப்பினர்களான இந்த மூவரிலும் இவர்களுக்குப் பதிலாக மூன்று சிங்களவர்களே இடைத்தேர்தல் மூலம் பின்னர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அரசுக்கு ஒத்துழைப்புக் கொடுத்துக் கொண்டிருந்த தமிழ், முஸ்லிம் கட்சிகள் இவ்வாறாகத் தமக்குக் கிடைத்த வாய்ப்பும் உரிமையும் கிடைத்தால் சிங்கள இன, தமிழ் இனத்தை முற்றாக அழித்தொழிக்கும் எண்ணத்தையே கொண்டிருந்தது என்பதற்கு 1952 ஆம் ஆண்டில் மூதவை உறுப்பினர்களுக்கான இடைத்தேர்தல் தெரிவு சிறந்த எடுத்துக்காட்டாக அமைகிறது.

## 08 (42 ஆம் பக்கம்)

1965 ஆம் ஆண்டின் பொதுத்தேர்தல் முடிவுகள் எந்தக் கட்சிக்கும் தனித்து ஆட்சியமைக்கக் கூடிய பெரும்பான்மையை வழங்கவில்லை

| | |
|---|---|
| ஐக்கிய தேசியக்கட்சி | 66 |
| தமிழரசுக்கட்சி | 14 |
| தமிழ்க்காங்கிரஸ் கட்சி | 03 |
| சி.பி.டி சில்வாவின், சிறிலங்கா சுதந்திர சோசலிசக் கட்சி | 05 |
| சிறிலங்கா சுதந்திரக் கட்சி | 41 |
| லங்கா சமசமாசக் கட்சி | 09 |
| சிறிலங்கா கம்யூனிஸ்ட்கட்சி | 04 |

மண்டபத்தின் முன்பாக பொதுமக்களால் எழுப்பப்பட்ட நினைவுச் சின்னங்களையும் சிங்கள அரசு, தன்படைகளையும் கூலிகளையும் ஏவி உடைத்து நொருக்கியது.

**11 (77 ஆம் பக்கம்)**

இடைக்கால அரசின் முதல்வர் பதவி தமிழீழ விடுதலைப்புலிகள் இயக்கத்துக்கெனக் கூறப்பட்ட பொழுதிலும் புலிகள் விரும்பியவர்களை அப்பதவிக்கு நியமிக்கமுடியாத நிலை இருந்தது. விரும்பிய மூன்று பெயர்களைத் தந்து விட்டு அவர்களில் விரும்பிய ஒருவரை புலிகள் நியமிக்கலாம் என்று கூறிய அரசு புலிகள் முன்வைத்த பட்டியலிலிருந்து கிழக்கு மாகாணத்தவர்களைத் தெரிவு செய்வதற்கு முட்டுக்கட்டைகளை ஏற்படுத்தியது. விடுதலைப் புலிகள் முன்வைத்த பெயர்கள்:- **01.காசி ஆனந்தன் கிழக்கு மாகாணம், 02.பத்மநாதன் கிழக்கு மாகாணம், 03.சி.வி.கே. சிவஞானம் வடக்கு மாகாணம்.** கவிஞர் காசிஆனந்தன் அவர்களது பெயரை இந்திய அரசுத்தரப்பு விரும்பவில்லை என்று மறுத்துரைக்கப்பட, கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த பத்மநாதனின் பெயரை ஜே.ஆர் மறுத்தார். வடக்கு கிழக்கு ஒற்றுமைக்கென புலிகள் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்கு இவ்வாறு முட்டுக்கட்டைகள் போடப்பட்டன. அதே நேரம் கிழக்கிலும் முல்லை மாவட்டத்திலும் பெருமளவில் சிங்கள மக்களைக் குடியேற்றும் முயற்சி விரைந்து செயற்படுத்தப்பட்டது.

# வரலாறு சொல்லும் பாடம்














தமிழீழக் கல்விக் கழகம்